Acc. No. 2832

உ

சிவமயம்

ஆரியர் அகஸ்தியர் முத்தமிழ்க் கோவை.

இதில்

மதுரை

# ஸ்ரீ மீனாக்ஷியம்மைப்பிள்ளைத்தமிழ்.

இஃது

ஹிஸ்ஹைனெஸ் ஸ்ரீவிஜயநகர மஹாராஜா அவர்களுடைய
சென்னை ஹிந்து பாலிகா பிரதான பாடசாலைச்
செந்தமிழாசிரியரும்,
சென்னை:—ஆ. ம. து. வே.
ஆரியர் அமிர்த சங்கம் ஆதீநபுருஷரும்,
ஆ. ம. து. வே. ஆரியர் அமிர்த பஞ்சிகைநூலாசிரியரும்,
சென்னை—இந்தியாசமாசாரப் பத்திரிகாதியரும் ஆகிய,

**செ. கொ. சுப்பராயமுதலியாரால்**

பரிசோதிக்கப்பட்டு,
சென்னை
பெத்துநாயகன்பேட்டைத்திருப்பளித்தெரு
உ—வது—வீட்டில்—ஸ்தாபிக்கப்பட்டிருக்கும்
தனது
ஆ. ம. து. வே.
ஆரியர் முத்தமிழ்வாணிபீடம் பிரஸிற்
பதிப்பிக்கப்பட்டது.

2-வது பதிவு-பிரதி:—௧000.

ஸ்ரீ குருசங்கரவிஜய கலியப்தம்-௪௯௭௰௧வது
சுக்கிலவருஷ பங்குனிமீ
௧௮௭௰வரு.

1870

## பதிவு விளம்பரம்.

☞ சாஸ்திர நூல்களைப் பதிக்கும்படி நேசங்கொண்டிருக்கும் நமது இஷ்டர்களின் பொருட்டு, ஒருவாறு இதன்கீழ பதிவு கூலியையும், எழுத்தின் தரத்தையும், பாரம் க-இ ஸிரங் காபிக்காயினும், ஐந்நூறு காபிக்காயினும் விபரமாய்க் கண்டிருப்பதால், புத்தக மச்சிடுவோர விரைவில், தங்கள் இஷ்டப்படி, ஷெ அச்சுக் கூடக் கர்த்தரிடத்தில் சுலபமாய்ப்பேசித் தமிழ், தெலுங்கு, இங்கிலீஷ், கிரந்த புத்தகங்களை பதிவிட்டு, "ஹார்ட்பிர"ஸோடும், பவுண்டுவேலை கூலிதந்து முடித்துக்கொண்டுபோகலாம்!

பாரம் - க உ- ரூப.

I. தமிழ் ஸ்மால் பைகா பாடி............ (
,, பைகா பாடி........................ சு
,, இங்கிலீஷ் பாடி.................... ரூ௦
,, பைகா—ஸ்மால் பைகா............ சூ௦
II. இங்கிலீஷ் ஸ்மால் பைகா பாடி....... கூ
,, லாங்பிரிமர் பாடி.................. ௪
இங்கிலீஷும், தமிழும்............ ௬
III. ஸம்ஸ்கிருத கிரந்தம்..................... ௱
கிரந்தமும், தமிழும்.................. ௱௦
IV. தெலுங்கு புல்பாடி துப்பாடி............ ௱

## புத்தக விளம்பரம்.

ஆ. ம. து. வே.
ஆரியர் முத்தமிழ் வாணிபீடம் பிரஸ்
☞ இதுவரையிற் பதித்துள்ள புத்தகங்கள்:—

.கைவிலை - அணா.

தத்துவநிஜாநுபோகசாரம் - பாரம் க - இ உ
ஆத்மபோத நூல்........................... க௦
நெஞ்சுவிடுதூது.............................. உ
மாயாப்ரலாபம்................................ உ
ஸ்காந்தஸங்கிரஹவசநம்..................... ரூ
சீதாவிஜயவசநம்............................ ச
திருக்கழுக்குன்றப்பதிகம்................... ௭
மணவாளநாராயணசதகம்.................. ௦
கதாசிந்தாமணி.............................. ௦
கதாமஞ்சரி.................................... ௦
அகஸ்தியர் வைத்தியக்கும்மி............. ௨
இந்தியாசமாசாரப்பத்திரிகை-சஞ்சிகை. ௮
ஆ. ம. து. வே. ஆரியர் அமிர்த பஞ்சிகை ,, ௭

தற்காலப் பதிவு புத்தகங்கள்.

சின்னசயிலில் தாயுமானவர்பாடல்.
பெரியபுராணச்சங்கிரஹம்.
மீனாக்ஷியம்மைப்பிள்ளைத்தமிழ்.
இங்கிலீசுதமிழ்மாக மதிஸ்ப்பெலிங்புக்

உ

கடவுள் துணை.

# மதுரைமீனாக்ஷியம்மைபிள்ளைத்தமிழ்.

விநாயகக்கடவுள் துதி.

கார்கொண்ட கவுண்மதக்கடைவெள்ளமுங்கட் கடைக்கடைக்கனலுமெல்லை, சடவாது தடவுக்குழைச்செவி முகந்தெறி கடைக்காறிரட்டவெங்கோன், போர்கொண்ட வெண்கோட்பொலன்குவடு பொதியும்வென்னுபொடிதுடியடித்திவைத்துப், புழுதியாட் டயருமோரயிராவணத்துலவு போர்க்களிற்றைத்துதிப்பாந், தார்கொண்டமதிமுடியொருத்தன்றிருக்கண்மலர்சாத்தக்கிளர்ந்துபொங்கித், தவழுமிளவெயிலுமழநிலவுமளவளவலாற் றண்ணென்றுவெச்சென்றுபொன், வார்கொண்டணிந்தமுலை மலைவல்லிகற்பூர வல்லியபிராமவல்லி, மாணிக்கவல்லி மரகதவல்லியபிடேக வல்லிசொற்றமிழ்ந்தழையவே.

## காப்புப்பருவம்.

(திருமால் துதி.)

மணிகொண்டநெடுநேமி வலயஞ்சுமந்தாற்றுமாசுணச்சூட்டுமோட்டு, மால்களிறுபிடர்வைத்தவளரொளிவிமானத்துவாலுளைமடங்கறாங்கு,மணிகொண்டபீடிகையினம்பொன்முடிமுடிவைத்தெண்மையொடு வீற்றிருந்த, வங்கயற்கண்ணமுதைமங்கையர்க்கரசியையெம்மனையையினிதுகாக்க, கணிகொண்டதண்டுழாய்க்காடலைத்தொடுதேங்கலுழிபாய்ந்தளறுசெய்யக், கழனிபடுநடவையிற்கமலத்தணங்கரசோர்கையணைமுகந்துசெல்லப்,பணிகொண்டமுடவுப்படப்பாய்ச்சுருட்டுப்பணைத்தோளெருத்தலைப்பப், பழமறைகண்முறையிடப் பைந்தமிழ்ப்பின்சென்ற பச்சைப்பசுங்கொண்டலே. (௧)

(பரமசிவன் துதி.)

சிகரவடவரை குனியநிமிர்தரு செருவிலொருபொரு வில்லெனக்கோட்டினர், செடிகொள்பறிதலை யமணரொடிரொடர் செலவோர்மதலைசொல் வையையகூட்டினர், திருவுமிமையவர்தருவுமரவொலிசெயவலவர்கொளநல்குகைத்திட்டினர், சிறியவெனது புன்மொழியும் வடிதமிழ்தெரியுமவர்முதுசொல்லெனச்சூட்டினர், பகருமிசைதிசைபரவவிருவர்கள் பயிலுமியநெறி வெள்வளைத்தோட்டினர், பசியவறுகொடு வெளிறுநில்விரிபவளவண்மடர்பல்சடைக்காட்டினர், பதுமமுதல்வனும்ம

மூக்வரியதோர் பனுவலெழுதியவைதிகப்பாட்டினர், பரசுமிரசிதசனப யினடமிடுபேரதபதயுக முள்ளம்வைத்தேத்துதுந், தகரமொழுகியகுழ லுநிலவுமிழ் தரளநகையுமெ மையனைப்பார்த்தெதிர், சருவியமர்பொ ருவிழியமறுகிடை தளரவளர்வதொர் செல்விமுற்றக்கன, தனமுமன னுறவெழுதியெழுதருதம துவடிவையுமெள்ளிமட்டேற்றிய, தவளமலர் வருமிளமினொடுசததளமின்வழிப டுதையலைத்தாத்தனை,மகரமெறிகட லமுதை யமுதுகுமழலைபழகியகிள்ளையைப்பேட்டன, மடவநடைப யில்பிடியைவினாசெறிவனசெய்புயமிசைவையம்வைத்தாற்றிய, வழு தியுடைய கண்மணியொடுலவுபெண்மணியையணிதிகழ்செல்வியைத் தேக்கமழ், மதுர மொழு கியதமிழினியல்பயின் மதுனா மரகதவல்லி யைக்காக்கவே. (௨)

(சித்திவிநாயகர் துதி.)

கைத்தலமோடிரு கரடக்கனாத்திரை, கக்குகடாமுடை கடலிற்குளி த்தெமர், சித்தமதாமொருதறியிற்றுவக்குறு, சித்திவிநாயகனிசையை ப்பழிச்சுதும்,புத்தமுதோவருடழையைத்தழைத்ததோர், பொற்கொ டியோவெனமதுரித்துவட்டெழு, முத்தமிழ்தேர் தருமதுராத் தலத் துறை, மூத்தனமேவுபெண்ணரசைப்புரக்கவே, (௩)

(முருகவேள் துதி.)

பமரமடுப்பக்கடாமெடுத்தூற்றுமோர், பகடுநடத்திப் புலோமிசை ச்சூற்புயல், பருகியிடக்கற் பகாடவிப்பாற்பொலி, பரவையிடப்பத் தமாதெனத்தோற்றிய, குமரியிருக்கக்கலா மயிற்கூத்தயர், குளிர்புன மொய்த்திட்டசாரவிற்போச்சிறு, குறவர்மாட்குச்சலாமிடற்கேக்கறு, குமரனைமுத்துக்குமாரனைப்போற்றது, மிமிழ்வனமுற்றத்துமேருமு த்தார்த்தமுள், ளெயிறுகுநச்சுப்பணாடவித்தாப்பிசைத், திருகவிறுக்கி த்துழாய் முடிதீர்த்தனெ, டெவருமதித்துப் பராபவத்தீச்சுட,வமு துசெய்வித்திட்ட போனகத்தாற்சுட, ரடருமிருட்டுக்கிரீவமட்டாக்கி ய, வழகியசொக்கற்கு மால்செய்ததோட்டிக, லமர்செய்சயற்கட்குமா ரியைக்காக்கவே, (௪)

(நான்முகன் துதி.)

மேகப்பசுங்குழவிவாய்மடுத்துண்ணவும் விட்புலம்விருந்தயரவும், வெள்ளமுதம்விசுங்கருங் கிளைப்பைந்துகில் விரித்துகுத்துத்திவிரியு, நாகத்துமிச்சுடிகை நடுவட்கிடந்தமட நங்கையைப்பெற்றமற்றந், நாக ணைத்துஞ்சுதன் றந்தைக்குவந்துதவுநளினக்குழந்தைகாக்க,பாகத்துமர கதக்குன்றொன்றொர் தமனியக்குன்றொடு நிலைத்துநின்ற,பவளத்தட

ங்குன் றுளக்கண்ணதென் றப்பாஞ்சுடர் முடிக்குமுடிமூன், றுகத்தமை த்துப்பிரெருமுடிதன்முடிவைத் தணங்காகவிழ்திருக்கு, மபிடேகவ ல்லி யையளிக்குலமுழக்குகு மூலங்கயற்கண்ணமுதையே. (௫)

(தேவேந்திரன் துதி.)

சுழியுஞ்சுருங்கட் குண்டசுழிசுவற்றுஞ் சுடர்வேற்கிரிதிரித்த, தோன் களித்துச்சுறவுயர்த்தசொக்கப் பெருமான்செக்கர்முடி, பொழியுந் தரங்கக்கங்கைவிரா புனல்கால்பாய்ச்சத்தழைந்துவிரி, புவனந்தனி ப்பூத்தருள்பழுத்த பொன்னங்கொடியைப்பரக்கவழிர், திழியுந்துண ர்க்கர்பகத்திஞற விதழ்த்தேன்குடித்துக்குமட்டியெதி, ரெடுக்குஞ்சி றைவண்டுவட்டுறவுண் டிராக்கக்களாச்கு மதக்கலுழிக், குழியுஞ்சி றுகணேற்றருமுக் குரல்வெண்புயலுங் சுரும்புயலுங், குன்றக்குலைய வுகைத்தேறுங் குலிசத்தடக்கைப்புத்தேளே, (௬)

(திருமகள் துதி.)

வெஞ்சுட்டுநெட்டுடல்விரிக்கும்படப் பாயன்மீமிசைத்துஞ்சு நீல, மேகத்திறுகத்துவிடு சுடர்ப்படலமணி மென்பரலு றுத்தநொந்துப ஞ்சூட்டுசீறடிபதைத்துமதன்வெங்கதிர்ப்படுமிளவெயிற்குடைந்தும், பைந்துழாய்க்காடுவிரி தண்ணிழலொதுங்குமோர்பசுங்கொடியையஞ் சலிப்பா, மஞ்சூட்டகட்டுநெடு வான்முகடுருவுமொருமறையோதி மஞ்சலிக்க,மதிநாச்சிறைவிரியுமாயிரமுகக்கடவுண்மந்தாகினிப்பெ யர்த்த, செஞ்சூட்டுவெள் ளோதிமங்குடியிருக்கும்வளர் செஞ்சடைக் கருமிடற்றுத், தேவுக்குமுன்னின்ற தெய்வத்தை மும்முதலைத் திரு வெப்பரக்கவென்றே. (எ)

(கலைமகள் துதி.)

வெள்ளித்தகட்டுநெட்டேடவிழ்த்தின்னிசைவிரும்புஞ்சுரும்பர்பா ட, விளைநறவுகக்கும்பொலன்பொகுட்டலர்கமல வீட்டிக்கொழித்தெ டுத்துத், தெள்ளித் தெளிக்குந் தமிழ்க்கடலினன் பிணைந்திண யெனவெடுத்தவிறைநூற், றெள்ளமுதுகூட்டுணுமோர் வெள்ளோதி மத்தினிருசிறடி முடிப்பம்வளர்பைங், கிள்ளைக்குமழலைப் பசுங்குதலை யொழுகுதீங் கிளவியுங் களிமயிற்குக், கிளரிளஞ்சாயலு நவ்விக்குநோக் கும்விரிகஞ்சுகச்சூட்டரசனப், பிள்ளைக்குமட நடையுமுடனூடுமகளிர்க் கோர் பேதைமையு முதவிமுதிராப், பிள்ளைமையின்வள் ளன்மை கொள்ளுமொருபாண்டிப் பிராட்டியைக்காக்கவென்றே. (அ)

(காளி துதி.)

வடிபட்டமுக்குடுமிவடிவேறிரித்திட்டு வளைகருங்கோட்டுமோட்டு, மகிடங்கவிழ்த்துக்கடாங்கவிழ்ச் குஞ்சிறுகண் மால்யானைவீங்கவாங்கு

ந், துடிபட்டகொடிநுண் ணுசுப்பிற்குடைந் தெனச்சுடுகடைக்கனலி தூண்டுஞ், சுழல்கண்மூடங்குளைமடங்கலையுகைத்தேறு சூரரிப்பிணவு காக்க, பிடிபட்டமடநடைத்தோகைக்கற்றகூந்தற்பிடிச்குழாஞ் சுற்றவொற்றைப், பிறைமருப்புடையதோர் களிற்றினைப் பெற்றெந்தை பிட்டுண்டுகட்டுண்டுநின், றடிபட்டதிருமேனி குழையைக் குழைத்துட்டவணிமணிக்கிம்புரிக்கோ, டாகத்ததாகக்கடம்பாடவிக்குள்விளை யாடுமோர்மடப்பிடியையே. (௬)

(சத்தமாதர்கள் துதி.)

கடகளிறுதவுகபாய் மிசைப் போர்த்தவள், கவிகுவி துறுகலின்வாரியைத்தூர்த்தவள், கடல்வயிறெரியவொள்வேலினைப்பார்த்தவள், கடிகமழ்தருமலர்த்தார்முடிச்சேர்த்தவ, ளிடியுகவடலரி யேறு கைத்தார்த்தவ, ளெழுதருமுழுமறை நூலினிற்கூர்த்தவ, ளெயிறு கொடுழுதெழுபாரினைப்பேர்த்தவ,ளெ னுமிவரெழுவர்கடாண் முடிச்சூட்டுதுங்,குடமொடு குடவியர்பாணிகைக்கோத்திடு, குரவையுமலதோர் பணுமுடிச்சூட்டருள், குதிகொளநடமிடுபாடலுக்கேற்றவோர், குழலிசைபழகளிபாடிடக்கேட்டிடை, மடலவிழ்துளபநறு வெடுத் தூற்றிட, மழகளிறெனவெழுகார்முகச்சூற்புயல், வரவருமிளையகுமாரி யைக்கோட்டெயின்,மதுரையில்வளர்கவு மாரியைக்காக்கவே, (௭)

(முப்பத்துமூவர் துதி.)

அமரில்வெந்நிடுமேவுதியர்பின்னிடு மோரபயிர்பின்னிடு வனத்தொக்கவோடவு, மளவுமெய்முடைய திறையிதென்னமுடி யரசரெண்ணிலரோர் முற்றத்துவாடவு, மகிலமன்னரிவர் திசையின்மன்னரிவரமரரொன் னுமூனாதிக்கெட்டுமூடவு, மமுதவெண்மதியின் மரபையுன்னியுனியலரியண்ணன்முழு வெப்பத்து மூழ்கவுங், குமரிபொன் னிவைவைபொருநைநன்னதிகள் குதிகொள் விண்ணதியின் மிக்குக்குலாவவுங், குவடுதென்மலையினிரதின்மைசுரர்குடிபொன்மலைததித்துப்பராவவுங், குமரர்முன்னிருவர மரரன்னையிவள் குமலயின்னமு மெனச்சித்தர்பாடவுங், கமலமுன்னியிடுமரசவன்ன மெழுகடலிலன்னமுடனைட்புக்கைகூடவுங், கரியசெம்மலொடுமிளையசெம் மல்விடுகருடன்மஞ்ஞையொடோர் கட்சிக்குளோடவுங், கடவிவிண்ணரசு நடவும்வெம்முனையகளிறுகைம்மலைசெல் கொப்பத்துவீழவுங். கனகமன்றுதட நளினிதுன்னியிரு கமலமின்றுமொரு பத்மத்துள்மேவவு, மிமயமென்னுமனுமுறைகொடென் னருமெ மிறையை நன்மரு மெனப்பெற்றுவாழவு, மெவர்சொல் பண்ணவர்க ளெவர் கொண்மலை ணவர்க ளெதுகோல் பொன் னுலகெனத்தட்டுமாறவு, மெழில்செய்தென் மதுரா திலை

யமும்மூலெ டொடெழுமெனம்மனே வனப்புக்கோர்சாவல, ரிருவரொ ண்மர்பதி னொருவர்பன்னிருவ ரொனுமவிண்ணவர்கண முப்பதுமூ வரோ. (௰௧)

காப்புப்பருவம் - முற்றுப் பெற்றது.

—o—



௨

## செங்கீரைப்பருவம்.

நீராட்டியாட்டி பொற்சுண்ணமர்திமிர்ந்தள்ளி நெற்றியிற்றொட்டிட் டமெவண், ணீற்றின்றும்புண்டரக்கீற்றுக்குமேற்றிடவொர்நித்திலச்சுட் டிசாத்திச், தாராட்டுசுழியக்கொண்டையு முடித்துத் தலைப்பணிதிரு த்திமுத்தின், றன்னொளிததுப்புங் குதம்பையொடு காதுக்கோர் தம னியக்கொப்புமிட்டுப், பாராட்டுபொன்டிப்பெருந்தேவிதிருமுலைப்பா லமுதமூட்டியொருநின், பானுறுகுமுதங்கனிந் தூறுதேற்றன் பட்டா டைமடி நனைப்பச், சீராட்டிவைத்து முத்தாடும் பசுங்கிள்ளைசெங்கீரை யாடியருளே, தென்னற்குமம்பொன்மலைமன்னற்கு மொருசெல்வி செங்கீரையாடியருளே. (௧)

உன்னிலாவுவகைப் பெருங்களிதுளும்பநின் றன்திருத்தாதை நி ன்னே, பொருமுறைசரம்பொத்தி வருமெனவழைத்திடுமு னோடித்த வழ்ந்துசென்று, தண்ணுலாமழலைப் பசுங்குதலையமுதினிய தாய்வ யிறுகுளிரவூட்டித், தடமார்பநிறைகுங்கு மச்சேறளைந்துபொற் று டோய்தடக்கைபற்றிப், புண்ணுலாவடிதமிழ்ப் பைந்தாமம்விரியும்ப ணைத்தோளெருத்தமேறிப், பாசொளியமரகதத் திருமேனிபச்சைப் பசுங்கதிர் ததும்பமணிவாய்த், தென்னிலாவிரியநின் றரும்பசுந்தோ கை செங்கீரையாடியருளே, தென்னற்குமம்பொன்மலை மன்னற்கு மொருசெல்வி செங்கீரை யாடியருளே. (௨)

சுற்றுநெடுநேமிச்சுவர்க்கிசையவெட்டுச் சுயர்க்காணிறுத்திமேருத், தூணொன்றுநடுநட்டு வெளிமுகடுமூடியிரு சுடர்விளக்கிட்டுமுற்ற,வெ ற்றுபுனலிற்கழுவு புவனப்பழங்கலமெடுத்தடுக்கிப்புதுக்கூ, ழின்ன முதமூன்சமைத் தன்னைநீபஞ்முஙர பிழைத்திடவழித்தழித்தோர், முற்றவெளியிற்றிரியு மத்தப்பெரும்பித்தன் முன்னின்று தொந்தமி டவு,முனியாதுலைவசலு மெடுத்தடுக்கிப்பெரிய மூதண்டகூட மூட்டுஞ்,

சிற்றில்விளையாடுமொரு பச்சிளம்பெண்பிள்ளை செங்கீரையாடியருளே, தென்னற்குடம்பான்மலை மன்னர்க்கு மொருசெல்வி செங்கீரையாடியருளே. (௩)

மங்குல்படுகந்தரச் சுந்தரக்கடவுட்கு மழமதிர்க்கற்றைசுற்றும், வாணயனமூன்றுங் குளிர்ந்தமுதகலைதலை மடுப்பக் கடைக்கமேலுக்கும், பொங்குமதர்நோக்கிற் பிறந்தவானந்தப்புதுப்புணரிநீத்தெனமையன், புந்தித்தடத்தினை நிரப்பவழியடியர்பாற்போகசாகரமடுப்ப, வங்கணெடுஞாலத்திவித்தின்றி வித்தியவனைத்துயிர்களுந்தளிர்ப்ப, வருண்மடைதிறந்துகடை வெள்ளம்பெருக்கெடுத் தலையெறிந்துகளவுகளுஞ், செங்கயல்கிடக்குங்கருங்கட்பசுந்தோகைசெங்கீரையாடியருளே, தெ. (௪)

பண்ணறுவரி யிடற்றறு கான்மடுப்பப் பசுந்தேறலாறலைக்கும், பருமமீடிசையுமுதுபழமறைவிரித்தொளி பழுத்தசெந்நாவு மிமையாக், கண்ணறுமரகதக்கற்றைக் கலாமஞ்ஞைகண்முகிறதும்பவோங்குங், கார்வரையும் வெள்ளைவேர் கன்னிமாடத்துவளர் கர்ப்பூரவல்லிகதிர்நால், விண்ணறுமதிமுயற் கலைகிழிந்தொழிய பூதவெள்ளருவிபாயவெடிபோய், மீளுந்தகட்ட கட்டிளவாளை மோதமுகைவிண் டொழுகுமுண்டிகப்பூந், தெள்ணறுவருவிபாய் மதுரை மரகதவல்லி செங்கீரையாடியருமுள, தென்னற்குமப்பொன்மலை. (௫)

வேறு.

முகமதியூடெழு நகைநிலவாட முடிச்சூழியமாட, முரிபுருவக்கொடிநுதலிடுசுட்டிமூரிப் பொட்டசைந் தாட, விகல்விழி மகரமுமம்மகரம் பொருமிருமகரமுமாட, விடுநூபுரவடிபெடர்ச்சின் கிணைஞ்கிண்கிணியாடத், துகிலொடுசேர்தரு கொடிநுண் மருங்குறு வண்டுதுவண்டாடத், தொந்திசரிந்திட வுந்திகமந்தொளிர் குறுவடையாலிலைமத், நகிலசராசரநிலைமைபாடிட வாடுக செங்கீரை, யவனிதழைந்திட மவுலிபுனைந்தவளாடுக செங்கீரை. (௬)

தசைந்திடுகொங்கை யிரண்டலதெனவுமாதருதிருமார்பாடத், தாய்வருமெனப்பவர் பேதமைகண்டுதநுப்புனகையாடப், பசைந்திடு நாண்மலர்த்தமைவெளிநியோர்பச்சுடல்கொல்லவுமோர், பைங்கொடிபொல்கவுமொல்கிநுடங்கிய பன்னடிசரிந்தாட, விசைந்திடுதேவை நினைந்தனவென்ன விரங்கிடுமேகலையோ, டிடுகிடையாட வியற்கைமணம்பொதியிதழ்வழிதேறலினேறு, டசைந்தொசிகின்ற பசுங்கொடியெனவினிதாடுக செங்கீரை, யவனிதழைந்திட மவுலிபுனைந்தவளாடுகசெங்கீரை. (௭)

பரிமளமூறியவுச்சியின்முச்சி ப்திந்தாடச்சுடர்பொற், பட்டமுடன்சிறு சுட்டியுமெய்யிலொடு பனிவெண்ணிலவாடத், திருநுதன்மீ

தெழுதுறுவெயர்வாடத்தெய்வமணங்கமழுந், திருமேனியின்முழுமரக
தவொளியென்றடிக்கும்விரிந்தாடக், கருவிளைநாறுகுதம்பைததும்பிய
காதுதழைந்தாடச், கதிர்வெண்முறுவல்ருப்பமலர்ந்திடுகமலத்திருமு
கநின், னருள்விழியொடும்வளர் காருணைபொழிந்திடவாடுகசெங்கீரை,
யவனிதழைந்திடமவுலிபுனைந்தவ ளாடுகசெங்கீரை. (௮)

குருமணிவெயில்விட மாகதிநிழல்விரி குன்றேநின்றாதுங், குழவி
சைபழகிய மழைமுகிலெழவெழுசொம்பேவெப்பாக, மருவியபிணி
கெட மலிதருமருமைமருந்தேசந்தானம், வளர்புவனமுமுணர்வரு
மருமறையின் வரம்பேசெம்போதிற், கருணையின்முழுகியசயதிரிபசி
யகரும்பேவெண்சோறச், கலைமதிமரபிலோரிளமதியென வளர்கன்
றெயென்றேருதுந், திருமகள்கலைமக டலைமகன் மலைமகள் செங்கோ
செங்கீரை, தெளிதமிழ்மதுரையில் வளருமோரிளமயில்செங்கோசெ
ங்கீரை. (௯)

சங்குகிடந்ததடங்கைநெடும்புயறங்காய்பாங்காயோர், தமனியமலைப
டர்கொடியெனவடிவு தழைந்தா யெந்தாயென், றங்கணெடும்புவனங்
கடொழுந்தொறு மஞ்சேலென்றேருது, மபயமும்வரதமுமுபயமுமு
டையவ ணங்கேவெங்கோபக், கங்குன்மதங்கய மங்குடலங்க விடுங்கா
மன்சேமக், கயல்குடிபுகுமொரு துகிலிகையென நின்கண் போலுஞ்
சாயற், செங்கயறங்கு பொலன்கொடிமின் கொடிசெங்கோசெங்கீரை,
தெளிதமிழ் மதுரையில் வளருமொரிளமயில்செங்கோ செங்கீரை. (௰)

செங்கீரைப்பருவம் - முற்றிற்று.

உ

## தாலப்பருவம்.

தென்னன்றமிழினுடன்பிறந்தசிறுகாலரும்பத்தியருப்புந், தேமாநி
ழற்கண்டுஞ்சிளஞ்செங்கட்கயவாய்ப்புனிற்றெருமை, யின்னம்பசும்
புற்கறிக்கல்லாவிளங்கன் றுள்ளிமடித்தலனின், றிழிபாலருவியுவட்டெ
றியவெதியுந்திரைத்தீம்புனற்பொய்கைப், பொன்னங்கமலப்பசுந்தோ
ட்டுப்பொற்றாதாடிக்கற்றைநிலாப், பொழியுந்தரங்கம் பொறையுயிர்
த்த பொன்பொற்றெருடுதோலடிப் பொலன்றூட், டன்னம் பொலியு
ந் தமிழ்மதுரைக்கரசேதாலோதாலேலோ, வருள்சுற்கொண்டவங்க
யற்கண்ணமுதேதாலோதாலேலோ. (௧)

வீக்குஞ்சிறுபைந்துகிற்றேகை விரிவுங்கலாபமருங்கலேப்ப, விளையாட்டயருமனைற்சிற்றில் வீட்டுச்சுடிபுச்கோட்டியிருள், சிக்குஞ்சுடர்தூக்கழன் மணியின் செந்நமடுத்தருட்டடுப்பிற், செழுந்தாட் பவளத்துவடுக்கித் தெளிக்கு நறுந்தண்டேறலுலே, வாச்குன்குடக் கூன்குழிசியிலம் மதுவார்த்தரித்த நித்திலத்தின், வல்சிபுகட்டிவடித்தெடுத்துவயன்மாமகளிர் சுழாஞ்சிறுசோ, ருச்கும்பெருந்தண் பணைமதுரைக்கரசேதாலோ தாலேலோ, வருள்சூற்கொண்ட வங்கயற்கண்ணமுதேதாலோ தாலேலோ. (உ)

ஓடும்படலை முகிற்படல மூவர்நீர்த்துவரிமேய்ந்துகரு, வூறுங்கமஞ்சூல்வயிறுடைய விகைத்துக்கடவுட்கற்பகப்பூங், காடுந்தூரங்கக் கங்கைநெடுங் கழியுநீந்திய முதிரார்குங், கலைவெண்மதியின் முயரடவிக்கதிர்மீன்கற்றை கரைத்துதறி, மூடுங்ககன வெளிக்கூட முகடுதிறந்துடபறங்கோத்து, முந்நீருழக்கிச்சினவாளை மூரிச்சுறவி றேடும்விளை, யாடும் பழனத்தமிழ்மதுரைக் கரசேதாலோ தாலேலோ, வருள்சூற்கொண்டவங்கயற்கண் ணமுதேதாலோதாலேலோ. (ஙா)

ஊறுங்கரடக்கடத்துமுகந்தூற்றுமதமாமடவியர்நின், றுதருங்குழற்பூந்துகளங்கவோடவிடுத்தகுங்குமச்சேஞ், சேறுவழக்கியோட்டறுக்குந்திருமாமருகிலரசர்பெருந்தண்டேரோதுங்கக்கொண்டிஞ்சிநெடுஞ்சிறுதேருருட்டுஞ்செங்கழுமழ,வேறுபொருவேலிளைஞர்கடவிவுளிகடைவாய்குதட்டவழிர், திழியுமவிலாழி குமிளியெறிந் திரைத்துத்திரைத்துநுரைத்தொருபே, ராமுமக்குந்தமிழ்மதுரைக் கரசேதாலோ தாலேலோ, வருள்சூற் கொண்டவங்கயற் கண்ணமுதேதாலோ. (ச)

வார்க்குன் றிரண்டு சுமந்தொசியு மலர்க்கொம்பனையார் குழற்றுஞ்சு, மழலைச்சுரும்பர் புகுந்துழக்கமலர்த்தாருகுத்துவானநயைத், தூர்க்கும்பொதும்பின் முபர்கலைமேற் றுள்ளியுகளுமுசுக்கலையின், றுழனிக்கொதுங்கி கழனியினெற் குட்டுப்படப்பைமேய்ந்துகதிர்ப், போக்குன்றேதுங்கருமுகில்வெள்ளார்மள்ளர் பிணையலிடும், பொருகோட்டெருமைப் போத்திஞெடும் பூட்டியடிக்கவிடிக்குரல்விட், டார்க்கும்பழ னத்தமிழ்மதுரைக்கரசே தாலோதாலேலோ, வருள்சூற்கொண்டவங்கயற்கண்ணமுதே தாலோதாலேலோ. (ரு)

வே று.

காரிற்பொழிமழை நீரிற்சுழியெதிசுழியிற் சிறுகுழியிற், சுனையிற்கனைபெருதிரையிற்றவிழ் கண்டலின்வண்டலினைத், பொழிலிற்சுருள்புரிகுழலிற்கணிகையர் குழையிற் பொருகயல்போய்த், தேரிற்குமர

ர்கண்மார்பிற்பொலிதருதிறிவிற் பொருவில்வரிச், சிலையிற்றிரள்புயம லையிற்புலவிதிருத்திடவூழ்த்தமுடித், தாரிற்பொருதிடு மதுராத்துரா மகள் தாலோதாலேலோ, சங்கம்வளர்ந்திட நின்றபொலன்கொடி தாலோ தாலேலோ. (சு)

சேனைத்தலைவர்கடிசையிற்றலைவர்கள்செருவிற் றலைவர்களற், சிலையிற்றடமுடி தேரிற்கொடியொடு சிந்தச்சிந்தியிடுஞ், சோனைக்கணைமழை சொரியப்பெருகியகுருதிக்கடலிடையே, தொந்தமிடும்பல்க வந்தநிவந்தொரு சுழியிற்பவுரிகொள, வானைத்திரளொடு குதிரைத்திரளையுமப்பெயர்மீனமுகந், தம்மனையாடு கடற்றிறைபோல வடத்திராமோதவெழுந், தானைக்கடலொடு பொலியுந்திருமகள் தாலோதாலேலோ,சங்கம்வளர்ந்திட நின்றபொலன்கொடி தாலோதாலேலோ. (எ)

அமரர்க்கதிபதி வெளிறக்களிறெதிர் விளிறச்குளிறியிடா, வண்டமிசைப்பொலிகொண்டலுகைத்திடுமமரிற்றமரிஞெடுங், சமரிற்கவிழ்தருதிசையிற்றலைவர்கண்மலையிற்சிறகரியுக், கடவுட்படையொடுபிறகிட்டுடைவது கண்டுமுகங்குளிராப்,பமரத் தருமலர் மிலையப்படுமுடி தொலையக்கொடுமுடிதான், பைம்பொற்றடவரை திரியக்கடவியெதிரியப்படைதிரியாச், சமரிற்பொருதிரு மகனைத் தருமயில்தாலோதாலேலோ, சங்கம்வளர்ந்திட நின்றபொலன்கொடி தாலோதாலேலோ.(அ)

முதுசொற்புலவர்தெளித்தபசுந் தமிழ்நூல்பாழ்போகாமே, முளரிக்கடவுள் படைத்த பசுந்தரா கீழ்மேலாகாமே,யதிரப்பொருதகலிப்பகைஞன் தமிழ்நீர்நாடாளாமே, யகிலத்துயிர்க ளயர்த்துமறங்கடை நீணீர்தோயாமே, சிதையுற்றரசி யனற் றருமங் குடிபொய்மாய்வாகாமே, செழியர்க்கபயரு மொப்பென நின்றுணராதாரோதாமே, மதுராப்பதிதழை யத்தழையுங்கொடி தாலோ தாலேலோ, மலயத்துவசன்வளர்த்த பசுங்கிளி தாலோதாலேலோ. (கூ)

தகரக்கரிய குழற்சிறுபெண்பிள்ளை நீயோ தூயோன்வாழ், கைலத்தெயிலைவளைப்பவளென்றெதிர் சீறுவீறோதா, நிகரிட்டமர் செய்கணத்தவர்நந்திபிரானுடேயோடா, நிலைகெட்டுலை யவுடற்றவுடைந்ததொராமனோருகாமே, சிகரப்பொதியமிசைத்தவ ழுஞ்சிறு தேர்மேலே போயோர், சிவனைப்பொருத சமத்தனுகந்தருள் சேயோன்மாயாமே, மகரத்துவசமுயர்த்தபொலன் கொடிதாலோதாலேலோ, மலயத்துவசன் வளர்த்தபசுங்கிளிதாலோதாலேலோ. (க0)

தாலப்பருவம்-முற்றிற்று.

உ

# சப்பாணிப்பருவம்.

நாளவட்டத்தளிம நளினத்தொடுந்துத்தி நாகணையும் விட்டொரொட்
டு, நாட்டத்தனும்பரமவிட்டத்தனுர்துஞ்சு நள்ளிருளினுப்பணைண்ட,
கோளவட்டம்பழையநேமிவட்டத்தினொடுகுப்புற்றுவெற்பெட்டுமே
ழ்,சூட்டத்தினிற்கவிழ மூதண்டவேதண்டகோதண்டமோடுசக்கர,வா
ளவட்டஞ்சுழலமட்டித்து நட்டமிடுமதுமந்தர்சுத்தநித்த,வட்டத்தினு
க்கிசைய வெற்றிக்கனத்தன வட்டச்சிதை யொத்திட்டதோர், தாளவட்
ங்கொட்டுமைசப்பாணியொப்பவொரு சப்பாணிகொட்டியருளே, தமி
ழொடுபிறந்துபழ மதுரையில்வளர்ந்தகொடி சப்பாணி கொட்டியரு
ளே. (க)

பொய்வந்தநுண்ணிடை நுடங்கக்கொடுஞ்சிப் பொலந்தேரொட
மரகத்துப், பொன்மேருவில்லியை யெதிர்ப்பட்ட ஞான்றம்மைபொ
ம்மன் முலைமூன்றிலொன்று, கைவந்தகொழுநரொடுமுள்ளப்புணர்ச்
சிக்கருத்தானகத்தொடுங்க, கவிழ்தலைவணக்கொடு முலைக்கண் வைத்
திடுமொருகடைக்கணுக்கமுதமூற்ற, மெய்வந்தநாணினொடுநுதல்வ
ந்தெழுங்குறுவெயர்ப்பினொடுயிர்ப்புவீங்கும், விம்மிதமுமாய்வந்தவு
யிரோவமெனவூன்றுவிற்கடை விரற்கடைதழீஇத்,தைவந்தநாணினொ
டுதவழ்தந்த செங்கைகொடு சப்பாணி கொட்டியருளே,தமிழொடுபி
றந்துபழமதுரையில்வளர்ந்தகொடி சப்பாணி கொட்டியருளே. (உ)

பூமருவெடிப்பமுகை விண்ப கண்டலையீன்ற புனைநறுந் தளிர்கள்
கொய்தும், பொய் நற்பிணைக்களொடு வண்டற்கலம்பெய்து புழுதிவி
ளையாட்டயர்ந்தும்,காமருமயிற்குஞ்சிமடவனப்பார்ப்பினொடுபிறவுபி
றவும்வளர்த்தும்,காந்தள்செங்கமலத்தகழ்நீர்மணந்தெனக்கண்பொத்
திவிளையாடியுந், தேமருபசுங்கிள்ளைவைத்து முத்தாடியுந் திரள்பொற்
கழங்காட்டியுஞ், செயற்கையானன்றியு மியற்கைச்சிவப் பூறுசெயித
ழ்விரித்த தெய்வத், தாமரைபழுத்தகைத் தளிரொளிதுளும்ப வொரு
சப்பாணி கொட்டியருளே, தமிழொடு. (௩)

விண்ணளிக்குஞ்சுடர் விமானமுப்பரநாத வெளியிற்றுவாத சாந்த,
வீடுங்கடம்புபொதிகாடுந் தடம்பணை விரிந்தமிழ் நாடுநெற்றிக், கண்
ணளிக்குஞ்சுந்தரக்கடவுள் பொலியுமறுகாற்பீடமுமெம்பிரான், காமர்
பரியங்கக்கவின்றங்கு பள்ளியங் கட்டிலுந் தொட்டிலாகப், பண்ணளி
க்குஞ்சுதலை யமுதொழுகு குமுதப்பசுந்தேறலூறலொடும், பைங்குழ

விபெருவிரல் சுவைத்துநீ பருகிடப்பைந்தேறலூறுவண்கைத், தண்ணளிக் கமலஞ் சிவப்பூறவம்மையொரு சப்பாணி கொட்டியருளே, தமிழொடுபிறந்துபழமதுரையில்வளர்ந்த கொடிசப்பாணிகொட்டியருளே. (ச)

சேலாட்டுவாட்கட் கருங்கடற்கடைமடைதிறந்த முதமூற்றுகருணைத், தெண்டிரைகொழித்தெறிய வெண்டிரை நெருப்பூட்டு தெய்வக்குழைந்தையைச்செக், கோலாட்டுநின் சிறுகணைக்காற்கடத்திக்குளிப்பாட்டியுச்சிமுச்சிக், குஞ்சிக்குநெய்போற்றி வெண்காப்புமிட்டுவளர் கொங்கையிற்சங்குவார்க்கும், பாலாட்டிவாயிதழ்நெரித்தூட்டியுடலிற் பசுஞ்சுண்ணமுந்திமிர்ந்து,பைம்பொற்குறங்கினிற்கண்வளர்த்திச்சிறிய பரூஉமணித்தொட்டிலேற்றித்,லாலாட்டியாட்டுகைத்தாமரைமுகிழ்த்தம்மை சப்பாணிகொட்டியருளே, தமிழொடுபிறந்துபழமதுரையில்வளர்ந்தகொடிசப்பாணி கொட்டியருளே. (ரு)

வேறு.

வானத்துருமொடு டுத்திரள்சிந்த மலைத்தபுறந்தலையின், மன்னவர் பன்னவர் வாளின்மறிந்தவர் மற்றவர்பொற்முடியார், பானற்கணையுமுலைக்குவடும்பொரு படையிற்பட விமையோர், பைங்குடர் மூளையொடும்புதிதுண்டு பதந்தடிசுவைகாணுச், சேனப்பந்தரி னலகைத்திரள்பல குரவைபிணைத்தாடத், திசையிற்றலைவர்கள் பெருநாணெய்தசிறுநாணொலிசெய்யாக், கூனற்சிலையிநெடுங்கணைதொட்டவள்கொட்டுக சப்பாணி, குடைநிழலிற் புவிமகளைவளர்த்தவள் கொட்டுக சப்பாணி. (சா)

சமரிற்பிறகிடு முதியருமபயருமெதிரிட்டமராடத், தண்டதரன்செல்கரும்பகடிந்திரன் வெண்பகடோடுடையாத்,திமிரக்கடல்புகவருணன் விடுஞ்சுற வருணன்விடுங்கடவுட், டேரினுகண்டெழவார்வில் வழங்குகொடுங்கோல்செங்கோலா, விமயத்தொடும் வளர்குலவெற்பெட்டையுமெல்லலக்கல்லினிறீஇ, யெண்டிசையுந்தனிகொண்டுபுரந்துவடாதுகடற்றுறைதென், குமரித்துறையென்வாடுமடப்பிடி கொட்டுகசப்பாணி, குடைநிழலிற்புவி மகளைவளர்த்தவள்கொட்டுகசப்பாணி. (எ)

சென்றிடுவாளிகள்கூளிகள்காளிகள் ஞாளியிலாளியெனச், செருமலைசெம்மலை முதலியர்சிந்தச்சிந்திடநந்திபிரா, னின்றிலனேடலுமுன்னழகும்மவன்பின்னழகுங்காணு, நிலவுவிரிந்திடுகுறுநகைகொண்டுநெடுங்கயிலைக்கிரியின், முன்றிலினுடன்மறந்தமராடியோர்மூரிச்சிலைகுனியா, முரிபுருவச்சிலைசடைகுனியச்சில மூரிக்கணைதொட்டுக், குன்றவிலாளியை வென்றதடாதகை கொட்டுகசப்பாணி, குடைநிழலிற்புவிமகளைவளர்த்தவள்கொட்டுகசப்பாணி. (அ)

ஒழுகியகருணையுவட்டெழ வைத்தவருட்பார்வைச், சூளநெகிழடியர்பவக்கடல்வற்றவலைத்தோடிக், குழையொடுபொருது கொலைக்கணையைப்பிணையைச்சிறிக், குமிழொடுபழகி மதர்த்தசயற்கண்மடப்பாவாய், தழைகெழுபொழிலின் மூசுக்கலைமைப்புயலிற்பாயத், தவழில்மதிகலை நெக்குகுபுத்தமுதத்தோடே, மழைபொழியிமய மயிற்பெடைகொட்டுகசப்பாணி, மதுரையில்வளருமடப்பிடி கொட்டுகசப்பாணி. (௯)

செழுமறைதெளியவடித்த தமிழ்ப்பதிகத்தோடே,திருவருளமுதுகுழைத்துவிடுத்த முலைப்பாலாற், கழுமலமதலைவயிற்றைநிரப்பிமயிற்சேயைக், களிறெடும்வளர வளர்த்தவருட்செவிலித்தாயே, குழலிசைபழகிமுழுப்பிரசத்திரசத்தோடே,துதிகொளுநறிய கனிச்சுவைநெக்கபெருக்கேபோன், மழலையினமுதுகு சொற்கிளிகொட்டுக சப்பாணி,மதுரையில்வளருமடப்பிடிகொட்டுகசப்பாணி, (௰)

சப்பாணிப்பருவம்-முற்றிற்று.

——o——



௨

## முத்தப்பருவம்

காலத்தொடுகற்பனைகடந்த கருகூலத்துப்பழம்பாடற், கலைமாச்செல்வர் தேடிவைத்த கடவுண்மணியேயுயிராலவாலத்துணர்வி னீர்ப்பாச்சி வளர்ப்பார்க்கொளி பூத்தருள்பழுத்த, மலர்க்கற்பகமேயெமூதாச்சொன்மழலைத்தும்பு பசுங்குதலைச், சோலைக்கிளியே யுயிர்த்துணையாந்தோன்ருத் துணைக்கோர் துணையாகித், துவாதசாந்தப்பெருவெளியிற்றுரியங்கடந்தபரநாத. மூலத்தலத்து முளைத்தமுழுமுதலேமுத்தந்தருகவே, முக்கட்சுடர்க்கு விருந்திடுமம்முலையாய்முத்தந்தருகவே. (௧)

உருகியுருகிநெக்குநெக்கு ளுடைந்துகசிந்திட்டசும்பூறு, முழுவலன்பிற்பழவடியா ருள்ளத்தடத்தி லூற்றெடுத்துப், பெருகுபரமானந்தவெள்ளப் பெருக்கேசிறியேம் பெற்றம்பெரும், பேறேயூறு நறைக்கூந்தற் பிடியேகொடிநுண் ணுசுப்பொசிய, வருகுங்குமக்குன்றிரண்டேந்துமலர்ப்பூங்கொம்பேதீங்குழலின், மதுரங்கனிந்தபசுங்குதலைமழலையரும்பச்சேதாம்பன், முருகுவிரியுஞ் செங்கனிவாய்முத்தந்தருகமுத்தமே, முக்கட்சுடர்க்கு விருந்திடுமம்முலையாய் முத்தந்தருகவே. (௨)

கொழுதிமதர்வண்டுழக்குழற் கோதைக்குடைந்த கொண்டலுநின், குதலைக்கிளிமென் மொழிக்குடைந்த குறுங்கட்கரும்புங்கூன்பிறைக்கோ, டுழுதபொலன்சீறடிக்குடைந்தசெந்தாமரையும்பசுங்கழுத்துக், குடைந்தமஞ்ஞுற் சங்குமொழுகொளியகமுகுமழகுதொய்யி, லெழுதுநடந்தோட் குடைந்ததடம்பணையும்பணைமென்முலைக்குடைந்த, விணைமாமருப்புந்தருமுத்துன் திருமுத்தொவ்வா விசுபரங்கண், முழுதுந்தருவாய்நின்கனிவாய்முத்தந்தருகமுத்தமே,முக்கட்சுடர்க்குவிருந்திடுமும் முலையாய்முத்தந்தருகவே. (௩)

மத்தமதமாக் கவுட்டொருநான் மருப்புப் பொருப்பு முதைப்பொலிந்த,வானத்தரசுகோயில்வளர் சிந்தாமணியும்வடபுலத்தார், நத்தம்வளரவளகையர்கோநகரில் வளரும்வான்மணியு, நளினப்பொகுட்டில்வீற் றிருக்கு நங்கைமனைக்கோர்விளக்கமெனப்,பைத்தசுடிகைப்படப்பாயற் பதுமநாபன்மார்பில்வளர், பரிதிமணியுமெமக்கமமைபணிலவாழிவேயீன்ற,முத்த முகந்தநின்கனிவாய் முத்தந்தருக முத்தமே, முக்கட்சுடர்க்குவிருந்திடுமும்முலையாய் முத்தந்தருகவே. (௪)

கோடுங்குவடும்பொருதிரங்கக் குமரித்துறையிற்படுமுத்துங், கொற்கைத்துறையிற் றுறைவாணர்குளிக்குஞ்சலாபக்குவான்முத்து, மாடும்பெருந்தண்டுறைப்பொருனை யாற்றிற்படுதெண்ணிலாமுத்து, மந்தண்பொதியத்தடஞ் சாரலருவி சொரியுங்குளிர்முத்தும், வாடுங்கொடிநுண்ணுசுப்பொசிய மடவமகளிருடனுடும்,வண்டற்றுணாக்குவைத்து நெய்த்து மணந்தாழ்நறுமென்விகைப்படல, மூடுங்குழலாய்நின்கனிவாய் முத்தந்தருக முத்தமே, முக்கட்சுடர்க்கு விருந்திடுமும் முலையாய் முத்தந்தருகவே. (௫)

வேறு.

பைவைத்ததுத்திப் பருவுச்சுடிகைமுன்றிற் பசுங்கொடி யுடுக்கைகிழியப், பாயிருட்படலங்கிழித்தெழுசுடர்ப் பரிதிடரிதிக்கொடிஞ்சிமான்றேர், மொய்வைத்தகொய்யுளை வயப்புரவிவாய்ச்செல்ல முட்கோல்பிடித்துநெடுவான், முற்றத்தையிருள்பட விழுங்குந்துநிற்கொடி முனைக்கணைவடிம்புநக்கா, மைவைத்தசெஞ்சிலையு வப்புலியுமோட நெடுவான்மீன்மணர்துகந்த, வடவனாமுகந்தநின்வயக்கொடியெனப்பொலியு மஞ்சிவர்வளர்கநொச்சித், தெய்வத்தமிழ்க்கூட றழையத் தழைத்தவடிருப்பவளமுத்தமருளே, சேல்வைத்தவொண்கொடியை வலம்வைத்தபெண்கொடி திருப்பவளமுத்தமருளே. (௬)

பின்னற்றிணாக்கடன் மதுக்குடமறத்தேக்கு பெய்முகிற்காருடலம் வெண்,பிறைமதிகூன்குயற் லகைக்கடைஞரொடு புடைபெயர்ந்தி

டைநடங்கமவாலரு, மின்னற்றடித்துக் கரும்பொற்றொடிக்கடைசி மெல்லியர்வெரீஇப் பெயரவான், மீன்கணம்வெருக்கொள்ள வெடிவ ரால்குதிகொள்ளும் விட்புலம்விளைபுலமெனச், கன்னற்பெருங்காடு க ற்பகக்காட்டுவளர் கடவுண்மாகவளக்கொளக், காமதேனுவு நின்றகடை வாய் குதட்டக்கதிர்க்குலை மூதிர்ந்துவிளையுஞ், செந்நெற் படப்பைபம துணைப்பதிபுரப்ப வந்திருப்பவள முத்தமருளே, சேல்வைத்தவெண் கொடியைவலம் வைத்தபெண்கொடிதிருப்பவள முத்தமருளே. (எ)

சங்கோலிடுங்கடற் றுனைக்குவெந்திடு தராபதிகண்முன்றி றார்த் த, தமனியக்குப்பையுந் திசைமுதல்வர்தட மூடித் தர்மமுந்தலைமபங் ங்கச், கொங்கைகோலிடுங்கைக்கொடுங்கோலெடுத்திரிகுறும்புன்கொடி ச்சுறவுநின், கொற்றப்பதாகைக் குழாத்தி னுடுமிர சிதக்குன்றினுஞ் சென்றுலாவப், பொங்கோலவேலைப்புறத்தி னுடைகத்தினிமிர் போரா ழிபரிதியிரதப், பொங்காழிமற்றப் பொருப்பாழியிற்றிரி புலம்பப்புல ம்புசெய்யச், செங்கோறிருத்திய மூடிச்செழியர்கோமக டிருப்பவள முத்தமருளே, சேல்வைத்தவெண் கொடியைவலம்வைத்தபெண்கொ டி திருப்பவளமுத்தமருளே. (அ)

வேறு.

பருவமாமுதுபலவடியினிநெடுநிலநெக்கதுடக்களியிற், படுநகை படுதிமா கடமுடைபடுவ கடுப்பவுவட் டெழவும், விரிதலைமுதலொடு விளையுலமுலைய வுழக்கியமுட்சுறவின், விசையினின்வழி நறைமிடறு டிகமுகின் விழுக்குலைநெக்குகவும், கனையெடுபுணரியி னிருமடிபெரு குதடத்து மடுத்தகடக், களிறொடுபிளிறிடவிகலியமுகிலி னிரட்டியிரட் டிபமும், முரசதிகர்டிநகர்ம துணையில்வளர்கிளி முத்தமளித்தருளே, மு மூதுலகுறையதோர் கவுரியர்குலமணிமுத்தமளித்தருளே. (கூ)

புதையிருள்கிழிதர வெழுதருபரிதிவிளைத்தகடற் புவியிற், பொ துவறவடிமைசெய்திடுவழியடியர் பொருட்டலர்வட்டணையிற், றதை மலர் பொதுளியகளிபளிருமிறுகுழற்றிருவைத்த வளச், சததளமூளரி யின் வனிதையையுதவு கடைக்கண்மடப்பிடியே, பதுமமொடொழு கொளி வளையுநிகளின முகத்துமிடற்றுமுறப், பனிமதியொடுசுவைய மூதமுறதலொடு சொற்குதலைக்கணீரீஇ, முதுதமிழுததியில் வரு மொருதிருமகள் முத்தமளித்தருளே, முழுதுலகுடையதோர் கவுரிய ர்குலமணிமுத்தமளித்தருளே. (ய)

முத்தப்பருவம்-முற்றிற்று.

---

உ

## வருகைப்பருவம்.

அஞ்சிலம் போலிடவரிக்குறற்கிண்கிணி யரற்றசெஞ்சீறடிபெயர்த், தடியிடுந்தொறுநின் னலத்தகச்சுவடுபட் டம்புவியாம்பையர்கட, மஞ்சுதுஞ்சளகத்திளம்பிறையு மெந்தைமுடிவளரிளம்பிறையுநாற, மணிநூபுரத்தவிழுமென் குரற்கோவைசையுமடநடைக்கோதொடர்ந்துன், செஞ்சிலம்படியற்று தெய்வக்குழாத்தினொடு கிறையோதிமம்பின்செலச், சிற்றிடைக்கொல்கிமணிமேகலையிரங்கத்திருக் கோயிலெனவே னெஞ்சக், கஞ்சமுஞ்செஞ்சொற் றமிழ்க்கடலிங் கொண்டகாமர் பூங்கொடிவருகவே, கற்பகாடவியிற்கடம் பாடவிப்பொலியகற்சணுயகிவருகவே. (௧)

குண்டுபடுபேரகழி வயிறுளைந்தின்றலைபங்கோதையுமதுரமொழுகுங்; கொழிதமிழ்ப்பனுவற் றுறைப்படியுமடநடைக்கூந்தலம்பிடியுமறுகால், வண்டுபடுமுண்டகமனைக்குடிபுகழ்ச்சிவமணங்கமழவிண்டதொண்டர், மானதத்தடமலர்ப் பொற்கோயில் குடிகொண்டமாணிக்கவல்லிவில்வே, டுண்டுபடுமதிநுதற் றேகையொடுமேளவிம்பல்தொல்லுருவெடுத்தமர்செயுந், தொடுசிலையெனக்ககனமுகடுமுட்டிப்பூந்துணர்தலைவணங்கிநிற்குங், கண்டுபடுகன்னல்பைங்காடுபடுகூடற்கலாபமாமயில்வருகவே, கற்பகாடவியிற்கடம் பாடவிப்பொலிகயற்கணுயகிவருகவே. (௨)

முயல்பாய் மதிக்குழவி தவழ்சூலடிப்பலவின் முட்பொதிகுடக்கனியொடு, முடவுத்தடந்தாழை முப்புடைக்கனிசிந்த மோதிநீருண்டிருண்ட, புயல்பாய்ப்படப்பைத் தடம்பொழில் களன்றியேழ்பொழிலையுமொருங் கலைத்துப், புறமூடுமண்டச் சுவர்த்தலைமிடித்தப் புறக்கடன் மடுத்துழக்கிச், செயல்பாய்கடற்றானை செங்களங்கொளவம்மைதிர்கு விசயங்கொண்டநாட், டெய்வக்கயற்கொடிசடிசைதிசையெடுத்தெனத்திக்கெட்டுமுட்டவெடிபோய், கயல்பாய்குரம்பணைபெரும்பணைத் தமிழ்மதுராகாவலன்மகள்வருகவே, கற்பகாடவியிற்கடம்பாடவிப் பொலிகயற்கணுயகிவருகவே. (௩)

வடம்பட்டநின்றுணைக் கொங்கைக்குடங் கொட்டு மதுரவமுதுண்டுகடைவாய், வழியும்வெள்ளருவி யெனநிலவுபொழிகிம்புரி மருப்பிற்பொருப்பிடித்துத், தடம்பட்டபொற்றாதுசிந்துரங்கும் பத்தலத்தணிவதொப்பவப்பிற், சலராசியேழுந் தடக்கையின்முகந்து பின்றாணநீராணிரப்பி, முடம்பட்டமதியங்குசப்படையெனக்ககனமுகடுகை

தடவியுடுமீன், மூத்தம்பதித் திட்டமு பகடாமென வெழுமுகிற்படா நெற்றிசுற்றுங், கடம்பட்ட சிறுகட்பெருங்கொலையமழவிளங்களிறீன் றபிடி வருகவே, கற்பகாடவியிற்கடம் பாடவிப்பொலி கயற்கணுயகி வருகவே. (ச)

தேனொழுகுகஞ்சப் பொலஞ்சீறடிக் கூட்டுசெம்பஞ்சியின்குழ ம்பாற், றெள்ளமுதிறைக்கும் பசுஞ்சுழவி வெண்டிங்கள் செக்கர்மதி யாக்கனைபொரும், வானொழுகுதுங்கத் தரங்கப்பெருங்கங்கை வாணி நதியாச்சிவபிரான், மகுடகோடீரத்தடிச்சுவடழுந்திடு மரகதக்கொம்பு கதிர்கான், மீனொழுகுமாயிரு விசும்பிற்செலுங்கடவுள் வேழத்தின்ம த்தகத்தும், வீற்றிருங்குஞ் சேயிழைக்கும்பசுங்கமுகு வெண்கவரிவீ சும்வாசச், கானொழுகுதட மலர்க்கடிபொழிற் கூடல்வளர் கவுரியன்மக ள்வருகவே, கற்பகாடவியிற் கடம்பாடவிப் பொலிகயற்கணு யகிவரு கவே. (ரு)

வேறு.

வடக்குங்குமச்குன் றிரண்டேந்தும்வண்டன்மகளிர்சிறுமுற்றில், வாரிக்குவித்த மணிக்குப்பை வானுறடைப்பவழிபிழைத்து, நடக்குங் கதிர்பொற்பரிசிலராய் நகுவெண் பிறைக்கைத் தோணியதாய், நாண் மீன்பரப்புச் சிறுமிதப்பாய்நாப்பண்மிதப்பநாற் கோட்டுக்,கடக்குஞ் சரத்தின்மதநதியுங் கங்காநதியுமெதிர்கொள்ளக், ககனவெளியுங்கற்பக ப்பூங் காடுங்கடந்துகடல் சுருங்க,மடுக்குந்திரைத்தண்டுறைவையவ ளநாட்டரசே வருகவே, மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வே வருக வருகவே. (சா)

சுண்ணந்திமிர்ந்துதேனருவி துளைந்தாட றுகாற்றும்பிபசுந், தோ ட்டுக்கதவுந் திறப்பமலர்த்தோகைகுடிபுக் கோகைசெயுந், தண்ணங்க மலக்கோயில்பல சமைத்தமருதத்தச்சன்முழு,தாற்றுக்கமுகு நாற்றியி டுந் தடங்காவணப் பந்தரில்வீங்கும், விண்ணப்பொதிந்தமேகபடாமி சைத்தூக்கிய பன்மணிக்கொத்து, விரிந்தாவெனக்கானிமிர்ந்துதலைவி ரியுங்குலைநெற்கற்றைபல,வண்ணம்பொலியும் பண்ணைவயன் மதுனா க்கரசேவருகவே, மலயத்துவசன்பெற்றபெருவாழ்வேவருகவருகவே.

தகரக்குழலினறையுநறை தருதீம்புகையுந் திசைக்களிற்றின், ற டக்கைநாசிப்புழைமடுப்பத்தளருஞ்சிறு நுண்மருங்குல்பெருஞ், சிக ரக்களபப்பொம்மன் முலைத்தெய்வமகளிர் புடையிரட்டுஞ், செங்கைக் கவரிமுகந் தெரியுஞ்சிறுகாற் கொசிந்துகுடிவாங்க, முகரக்களிவண்ட டைகிடக்குமுளரி கொடிக்குங்கலைக்கொடிக்கு, முருந்துமுருவல்விருந்

திடுபுன் மூரனெடு வெண்ணிலவெறிப்ப, மசரக்கருங்கட் செங்கனிவாய்மடமான் கன்றுவருகவே, மலயத்துவசன்பெற்ற பெருவாழ்வேவருகவருகவே. (௮)

தொடுக்குங்கடவுட் பழம்பாடற்றொடையின்பயனே நறைபழுத்த, துறைத்தீந்தமிழினொழுகு நறுஞ்சுவையேயகந்தைக் கிழங்கையகழ்ந்,தெடுக்குந் தொழும்பருளக்கோயிற்கேற்றும்விளக்கே வளர்சிமைய,விமயப்பொருப்பில் விளையாடுமிளமென்பிடியேயெறிதரங்க, முடுக்கும்புவனங்கடந்துநின்றவொருவன் திருவுள்ளத்திலழகொழுகவெழுதிப்பார்த்திருக்கு முயிரோவியமேமதுகரம்வாய், மடுக்குங்குழற்காடேந்துமிள வஞ்சிக்கொடியே வருகவே,மலயத்துவசன்பெற்ற பெருவாழ்வேவருகவருகவே. (௯)

பெருந்தேனிறைக்கு நறைக்கூந்தற்பிடியேவருக முழுஞானப், பெருக்கேவருக பிறைமௌலிப் பெம்மான்முக்கட்சுடர்க்கிடுநல், விருந்தேவருகமூவாமுதற்கும் வித்தேவருகவித்தின்றி, விளைக்கும்பரமானந்தத்தின் விளைவேவருகபழமறையின், குருந்தேவருக வருள் பழுத்த கொம்பேவருக திருக்கடைக்கண், கொழித்த கருணைப் பெருவெள்ளக்குடைவார்பிறவிப் பெரும்பிணிக்கோர், மருந்தேவருகபசுங் குதலைமழலைக் கிளியே வருகவே, மலையத்துவசன்பெற்றபெருவாழ்வேவருகவருகவே. (௰)

வருகைப்பருவம்-முற்றிற்று.



உ

## அம்புலிப்பருவம்.

கண்டுபடுகுதலைப்பசுங்கிளியிவட்கொரு சசபேதமென்னநின்னைக், கலைமறைகண்முறையிடுவதன்றோவவ்வொண்கலாநிதியெனத் தெரிந்தோ,வண்டுபடுதெரியற் றிருத்தாதையார்மரபின்வழிமுதலெனக்குறித்தோ, வளர்சடை முடிக்கொந்தை தண்ணறுங் கண்ணியாவைத்ததுகடைப்பிடித்தோ, குண்டுபடுபாற்கடல் வருந்திருச்சேடியொடுகூடப்பிறந்ததோர்ந்தோ, கோமாட்டியிவணின்னை வம்மெனக்கொம்மெனக் கூவிடப்பெற்றாயுனக், கண்டுபடுசீரிதன்று தலாலிவளுடனம்புலீயாடவாவே, யாணிப்பொன்வில்லி புணர்மாணிக்க வல்லியுடனம்புலீயாடவாவே. (௧)

குலத்தோடு தெய்வக் குழாம்பிழிந் தூற்றுக்குடித்துச் சுவைத்துமிழ்ந்த, கோதென் றுமழல்விடங் சொப்புளிக்கின் றவிருகோளினுச்சிட்டமென்றுங், கலத்தோடுமூடிக்களங்கம் பொதிந்திட்டகயரோகியென் றுமொருநாட், கண்கொண்டுபார்க்கவுங் கடவதன் றெனவிக் கடர்புவியெடுத்திகழவிட், புலத்தோடுமூடுமீன் கணத்தோடி மோடு நின்போலவார்க்குமாபாதகம், போக்குமித்தலமலது புகலில்லை காண்மிசைப் பொங்குபுனல்கற்பகக்கா, டலைத்தோடுவையைத் துறைப்படிமடப்பிடியோ டம்புலீயாடவாவே, யாணிப்பொன்வில்லிபுணர் மாணிக்கவல்லியுட னம்புலீயாடவாவே. (௨)

கீற்றுமதியெனநிலவு தோற்றுபருவத்திலொளிகிளர் நுதற்செவ்விவவ்விக், கெண்டைத்தடங்கணொருவிட்டிறைஞ்சக்கிடந்ததுமுடைந்தமுதப்விண், டூற்றுபுது வெண்கலை யிடுத்துமுழுமதியென வுதித்தவனமப்பத்துமம்மை, யாண்முகத்தொழுகுதிருவழகைக்கவர்ந்துகொண்டோடினதுநிற்கமற்றை, மாற்றவளொடுங்கேள்வர்மௌலியிலுறைந்தது மறந்துனையழைத்தபொழுதே, மற்றிவள்பெருங்கருணை சொற்றிடக்கடவதோ மண்முழுதும்விட்புயம்வைத், தாற்றுமுடியரசுதவுமாசிளங்குமரியுடனம்புலீயாடவாவே, யாணிப்பொன்வில்லிபுணர்மாணிக்கவல்லியுடனம்புலீயாடவாவே. (௩)

விண்டலப்பொலிபப் பொலிந் திடுதியேலுனது வெம்பணிப்பகைவிழுங்கி, விக்கிடக்கக்கிடத்தொக்கிடர்ப்படுதிவெயில் விரியுஞ்சுடர்ப்பரிதியின், மண்டலம்புக்கனையிருத்தியெனினொளிமழுங்கிடவழுங்கிடுதிபொன், வளர்சடைக்காட்டெந்தைவைத்திடப்பெறுதியேன் மாசுணஞ்சுற்றவச்சங், கொண்டுகண்டுஞ்சா திருப்பதுமருப்பொங்குகோதையிவள் சிறணிகணின், குடர்குழம் பிடவேகுமைப்பதும் பெறுதியெக் கோமாட்டிபாலடைந்தா, லண்டபகிரண்டமுமகண்டமும் பெறுதியா லம்புலீயாடவாவே, யாணிப்பொன் வில்லிபுணர்மாணிக்கவல்லியுடனம்புலீயாடவாவே. (௪)

எண்ணில்பலபுவனப் பெருந்தட்டையூடுருவியிவள் பெரும்புகழ்நெடுநிலா, வெங்கணுநிறைந்துவ தங்கதனின்மெள்ளநீயெள்ளளவுமொண்டுகொண்டு, வெண்ணிலவுபொழிவது கிடைத்தனை மடுத்திவள் விழிக்கடை கொழித்தகருணை, வெள்ளந்துளைத்தாடுபெற்றியாற் றண்ணளி விளைப்பதும்பெற்றனைகொலா, மண்ணிலொன்னைபைங்கூழ்வளர்ப்பதுளிடத்தம்மை வைத்திடுஞ்சத்தியேகாண், மற்றொருசுதந்திரதினக்கெனவிலைக்கலைமதிக்கடவுணீபுமுணவா, யண்ணலங்களியானையரசர்கோமகளிடனம்புலீயாடவாவே, யாணிப்பொன்வில்லிபு. (௫)

முன்பும்பராசுசெம்பெரும்பாவமுங்கோப மூரிமாதொடர்சாப
மு, மும்மைத்தமிழ்ச்செழியன் வெப்பொடுகொடுங்கூனுமோசி
த்தவித்தலத்தின், றன்பெருந்தன்மையையுணர்ந்திலைகொல் சிவஞான
தானியாய்ச் சீவன்முத்தித், தலமுமாய்த் துவாதசாந்தத்தலமுமால தி
த்தலமித்தலத்தடைதியேன், மன்பெருங்குரவற்பிழைத்தபாவமுமற்
றைமாமடிகளிடுசாபமும், வளரிளம்பருவத்துநனா லையுமுதிர்கூனு
மாற்றிடப்பெறுதிகண்டா, யன்பொன்புருகக் கசிந்திடுசுந்தேனே
டம்புலீயாடவாவே, யாணிப்பொன்வில்லிபுணர் மாணிக்கவல்லியு
டனம்புலீயாடவாவே. (௬)

கும்பஞ்சுமந்தமத வெள்ளைநீர்கொட்டுங் கொடுங்களிறிடம்போ
ர்வையான், குடிலகோடீரத்திருந்துகொண்டநலார் காய்தளிர்க்கை
வருடவுஞ், செம்பஞ்சுறுத்தவம் பதைபதைத்தாரழற்சிகைபெலக்கொ
ப்பளிக்குஞ், சீறடிகள்கன்றிச் சிவந்திடச்செய்வதந் திருவுளத்தடை
யாதுபோற், றம்பஞ்சுமந்தின்ற மானிடவிலங்கின் றனிப்புதல்வன
க்குவட்டத், தன்குடைநிழற்றுநீள வம்மெனவழைத்தனடழைத்திடு
கவழக்கரும்பொன், றம்பஞ்சுடன்கொண்டமகரக்கொடிக்கொடியொ
டம்புலீயாடவாவே, யாணிப்பொன்வில்லிபுணர்மாணிக்கவல்லியுடன
ம்புலீயாடவாவே. (௭)

துளிதூங்குதெள்ளமுத வெள்ளருவிபொழியுநின் றன்பரபு
தமையவந்து, தோன்றிடுங்கவுரியர் குலக்கொழுந்தைக்கண்டு துணை
விழியுமனமுநின்று, களிதூங்கவளவளாய் வாழாமலுன்னமதுகலை
யோடுமிழந்துவெறுமட், கலத்திடுபுதுக்கூழினுக்கிரளடொருகளிங்க
ங்கமனவத்தாயிதுவலா, லொளிதூங்குதெளிவிசும்பினினில்லேடொதி
தவனெருத்தன கரத்தின்வாரி, யுண்டதுக்கியமிச்சி லள்ளிருவி ல
ளியுண்டோடுகின்றுயென்செப்தா, யளிதூங்குஞிமிலெழுந்தார்க்கும்
குழற்றிருவொடம்புலீயாடவாவே, யாணிப்பொன் வில்லிபுணர் மா
ணிக்கவல்லியுடனம்புலீயாடவாவே. (௮)

மழைக்கொந்தளக்கோதை தம்முனென்றளவினீ வந்திலையென
க்கடுகலும், வாண்முகச்செவ்விக் குடைந்தொதுங் கிலைவனெதிர் வா
வொல்கி யோபணிகள்சோ, ளிழைக்குங்கொல்பின்றொடர்ந் தெனவ
ஞ்சியோ தாழ்ந்திருந்தன் போலுமெனயா, மித்துணையுமோர் துவாறு
தப்புவித்தோம்வெகுளி னினியொருபிழைப்பில்லைகாண, டழைக்குந்
துகிற்கொடி முகிற்கொடிதினாத்துமேற் றல்வளர் நகர்க்கொடிக்கோ
ச், தாழ்குதலு நீவிறுதல்வெயர்வுந் துடைத்தம்மை சுமையமிது மவன்
றனுவலிட், டழைக்குந்தட்ப்புரிசை மதுனாப்பெணுட னம்புலீயாட

வாவே, யாணிப்பொன்வில்லி புணர்மாணிக்க வல்லியுடனம்புலீயாடவாவே. (௯)

ஏடகத்தெழுதாதவேதச்சிரத்தர்சிருக்குமிவள் சீரடிகணியின், னிதையத்திடத்தும் பொலிந்தவர்திருவுளத்தெண்ணியன் றேகபடமா, நாடகத்தைந்தொழி னடிக்கம்பிரான்றெய்வ நதியொடுமுடித்தல் பெற்ருய், நங்கையிவடிருவுளமகிழ்ச்சிபெறிலிதுபோலோர்நற்றவப் பேறில்லைகாண்,மாடகக்கடைதிரித் தின்னரம்பார்த்துகிர்வடிம்புதைவருமன்னலார், மகரயாழ்மழலைக்குமரவங்கணுண்டுகில் வழங்கக்கொழுங் கோங்குதூங், காடகப்பொற்கிழி யவிழ்க்குமதுரைத்திருவோடம்புலீயாடவாவே, யாணிப்பொன்வில்லிபுணர் மாணிக்கவல்லியுட னம்புலீயாடவாவே. (௰)

அம்புலிப்பருவம் - முற்றிற்று.

——o——



உ

# அம்மானைப்பருவம்.



கனாக்குங்கடாமிருக வட்குடமுடைந்தூற்றுகளிறு பெருவயிறுதூர்ப்பக், கவளந்திரட்டிக்கொடுப்பதெனவுஞ்சூழ்ந்தோர் கலைமதிக்கலசவமுதுக், கினாக்கும்பெருந்தேவர் புன்கண்டுடைத்திட வெடுத்தமுதகலசம்வெவ்வே, றீந்திடுவதெனவுமுழு முத்திட்டிழைத்திட்டவெதிபந்தர்நிரையென்னவும், வினாக்குந்தளிர்க்கைக் கொழுந்தாமரைத் துஞ்சிமீதெழுந்தார்த்தபிள்ளை, வெள்ளோதிமத்திரளி தெனவுங்கரும் பானைமீமிசைச் செஞ்சாந்துவைத், தனாக்குந்தினாக்கைவெள் ளருவிவையைத்துறைவி யம்மானையாடியருளே, யாகங்கலந்தொருவர் பாகம்பகிர்ந்தபெண்ணம்மானையாடியருளே. (௧)

திங்கட்கொழுந்தைக் கொழுந்துபடு படர்சடைச் செருகுதிருமணவாளன்மேற், செழுமணப்பந்தரி னெடுத்தெரியுமமுதம் வெண்டிரளையிற்புரளுமறுகாற், பைங்கட்கரும்பெனவிசும்பிற் படர்ந்தெழும்பனிமதி மிசைத்தாவிடும், பருவமட்டாமெனவெனம்மனைநினம்மனைப் படைவிழிக்கயல்பாய்ந்தெழ,வெங்கட்கடுங் கொலையவேலைக்குழாமிதெனமேகக்குழாத்தைமுட்டி, விளையாடுமழகளிருகடைவாய்க்கு

தட்டமுலைக விண்டவம்மைபந்துகோத்த, வங்கட்கரும்பேந்து மயிடே கவல்லிதிரு வம்மானையாடியருளே, யாகங்கலந்தொருவர் பாகம்பகிர்ந்தபெண்ணம்மானையாடியருளே. (௨)

கள்ளூறுகஞ்சக்கரத் தூறுசேயொளி கலப்புச்சிவப்பூறியுங், கருணைப்பெருக்கூற வமுதூறுபார்வைக்கடைக்கட் கறுப்பூறியு, நள்ளூறு மறலூறகற்றுமுகமதியில்வென் ணகைசையூறுதில்லூறியு, நற்றாளவம்மனையோர் சிற்குணத்தினைமூன்று நற்குணங்கதுவல்காட்ட, வுள்ளூறுகளிதுளும் பக்குரவரிருவிரு முற்றிடுதுவாதசாந்தத், தொருபெருவெளிக்கே விழித்துறங்குந் தொண்டருமுவலன்பெுஃபுருகநெக், கள்ளூறவுள்ளேகசிந்தூறுகடைபந்தேறலம்மானையாடியருளே, யாகங்கலந்தொருவர்பாகம்பகிர்ந்தபெண் ணம்மானையாடியருளே. (௩)

குலைபட்டகாந்தட் டளிர்க்கையிற் செம்மணிகுயின்ற வம்மனைநித்திலக், கோத்தவம்மனைமுன்செலப்பின் செலுந்தன்மை மோகனகமனையாட்டிபாற், கலைபட்டவெண்சுடர்க்கடவு ட்டாய்நம்தவதுக்கண்டுகொண்டேபுழுங்குங், காய்கதிர்க்கடவுளும்பின் றொடர்வதேய்ப்பக்கறங்கருவிதூங்கவோங்கு, மலைபட்டவாரமும்வயிரமும்பிறவுமாமாமணித்திரளைவாரி, மறிதிரைக்கைபா லெடுத்தெறிபநாற்கோட்டு மதகளிறுபிளிறியோடு, மலைபட்டவையைத்துறைச்சிறை யனப் பேடையம்மானையாடியருளே, யாகங்கலந்தொருவர்பாகம்பகிர்ந்த பெண்ணம்மானையாடியருளே. (௪)

தமரானநின் றுணைச்சேடியரிலொருசிலர் தடக்கையினெடுத் தாடுநின், றளவம்மனைபிடித்தெதிர்விசிவீசியிடசாரிவலசாரிதிரியா, நிமிராமுனம்மனையொ ராயிரமெடுத்தெறிய நிரைநிரையதாய்ச்சகனமே, னிற்கின்றதம்மைநீ பெற்றவகிலாண்ட மு னிரைத்துவைத் துநகைப்ப, வியிராவரிச்சுரும் பார்த்தெழப்பொழிலூ டெழுந்தலைந்தூதுலகெல்லாமிருள்செயச்செய்துநின் சேடபாகமெனு மெச்சமளகாபுரிக்கு, மமராவதிக்குஞ்செய் மதுராபுரித்தலைவி யம்மானையாடியருளே, யாகங்கலந்தொருவர்பாகம்பகிர்ந்தபெண்ணம்மானை யாடியருளே. (௫)

உயிராயிருக்கின்ற சேடியரும்மலர்மீதுதித்தவளெதிர்த்து நின்னோடு, டொட்டியெட்டிப்பிடித்திட்டவம்மனைதேடி யோடியாடித்திரிய நீ,பெயராதிருந்துவிளை யாடுவதுகண்டெந்தைபிறைமுடி துளக்கமுடிமேற், பெருகுசுரகங்கைநுரை பொங்கலம் மானையப் பெண்கொடியுமடன்மான,வெயராமனம்புழுங்கிடுமரதச்சனும் வியப்பச்செயுர்தவளமா, மேடையுந்தண்டரளமாட முந்தெண்ணிலாவீசத் திசைக்குளிறெலா,மயிராவதத்தினைநிகர்க்குமதுரைத்தலைவியம்மானையாடியருளே. ()

வேறு.

முத்தமரூத்தியவம்மனைசம்மலர் முளரிமணங்கமழ, மொய்கு
ழல்வண்டுநின் மைவிழிவண்டின் மயங்கிமயங்கியிடக், கொத்துமணி
த்திரளிற்செயுமம்மனை குயிலின் மிழற்றியநின், குழலினிசைக்குருகிப்
பனிதூங்கு சூறந்துளிசிந்தியிட, வித்துருமத்திலிழைத்தவு நின்கைவி
ரற்பவளத்துளிரின், விளைதருமொள் ளொளிதிருடப்போவதுமீள்வதுமா
யிதரிய, வத்தன்மனத்தெழுதியவுயிரோவிய மாடுகவம் மனையே, யழ
குதழைந்தகல்யாணசவுந்தரியாடு கவம்மனையே. (எ)

விளரிமிழற்றளிகுமிறுகுழற்கொடி வீசியவம்மனைபோய், விண்
ணினிடைத்திடுவதுகககனந்திருமேனியதானவரு, கிளநிலவுமிழ்பருமுத்
தின்சோலைமெயடுத்தவதிருமார்புக், கிடுவகடுப்பவுமம்பரிசேபலமணி
பிணியற்றியிடும், வளரொளிவிம்மிய வம்மனைசெல்வதுவானவி லொத்
திடவு, மனனெனக்குருகப்பரமாநந்த மடுத்தசிருத்தொண்டர்ச், களிக
ளியத்திரு வருள்கனியுங்கனியாடுகவம்மனையே, யழகுதவழ்ந்தகல் யா
ணசவுந்தரி யாடுகவம்மனையே. (அ)

கைம்மலரிற்பொலி சுதிர்முத்தம்மனை நகைமுத் தொளிதோயக்,
கண்டவர்நிற்கப்பிறர்சிலர்செங்கைகமலச்சுடர்கதுவச், செம்மணியிற்
செய்திழைத்தனவெனவுஞ் சிற்சிலர்கட்கடையின், செவ்விய வவ்விய
பின்கருமணியிற் செய்தனசொல்லெனவுந், தம்மனமொப்ப வுணாப்
பனமற்றைச் சமயத்தலைமைவுபெறார், தத்தமினின்று பிதற்றுவபொரு
வத் தனிமுதல்யாமென்பார்க், கம்மனையாயவர் தம்மனையானவளாடுக
வம்மனையே, யழகுதழைந்த கல்யாண சவுந்தரியாடுகவம்மனையே. (கூ)

ஒள்ளொளிமரகத மும்முழுநீலமு மொண்டரளத்திரளு, மொழு
கொளிபொங்கவிழைத்திடுமம்மனை யொருமூன்றடைவிலெட்டாக், க
ள்ளவிழ்கோதை விசும்புறவீசுவ கண்ணுதல்பாற்செலநின், கையில்வ
ளர்த்தபசுங்கிளியும்வளர்காமர்கருங்குயிலும், பிள்ளைவெள்ளோதிமமு
ம்முறைமுறையாற்பெருகியகாதலமேற்,பேகவிடுப்பசடுப்பவணைத்
தொருபெடையோடசவுன, மள்ளல்வயற்றியின் மதுரைத்துரைமக
ளாடுகவம்மனையே, யழகுதழைந்தகல்யாண சவுந்தரியாடுகவம்மனை
யே. (ய)

அம்மானைப்பருவம் - முற்றிற்று.

———

உ

# நீராடற்பருவம்.

---

வளையாவெண்மைப் பொலன்சங்கொடும் பொங்குமதிநிலாச்சங்
கோலிட, மதரரிக்கட்கயல்வரிக்கயலொடும் புரளமகரந்தழுண்டுவண்
டின், கிளையாடுநின்றூக்கேசபாசத்தினொடு கிளர்சைவலக்கொழுந்தெழ
க்,கிடையாதபுதுவிருந்தெதிர்கொண்டுதத்தமிற்கேளிர்கடழீஇக்கொ
ண்டெனத், தளையாடுகறைபடிச் சிறுகட்பெருங்கைத்தடத் தடக்களி
றெடுத்துமற்மத், தவளக்களிற்றினொடுமுட்டவிட்டொட்டுமதநதந்திய
ம்பந்தடித்து, விளையாடும் வையைத்தடந்துறை குடைந்துபுதுவெள்
ளநீராடியருளே, விடைக்கொடியவர்க்கொருசயற்கொடிகொடுத்தகொ
டி வெள்ள நீராடியருளே. (௧)

நிலைபொங்கிடுஞ்செங்கை வெள்வளைக்லிப்பநகைநிலவுவிரிபவள
ம்வெளிற, நீலக்கருங்குவளைசெங்குவளைபூப்பவறனெறிகுழற்கற்றை
சரியச்,திறைபொங்குதண்ணந்துறைக்குடைந்தாடுவ செழுந்தரங்கக்கங்
கைநுண், சிறுதிவலையாம்பொங்குமானந்த மாக்கடறினைத்தாடுகின்ற
தேய்ப்பச்,கலைபொங்குமதிநிலாக்கையாற்றடம்பணைக்கழனியிற்சன்
னியர்மூலைக், களபக்குழம்பைக் கலைத்துவிட்டுள்ளற்கருஞ்சேறுசெ
ஞ்சேறதாய், வினைபொங்கிடத்துங்க வேகவதிபொங்கு புதுவெள்ளநீ
ராடியருளே, விடைக்கொடியவர்க்கொருகயற்கொடி கொடுத்தகொடி
வெள்ளநீராடியருளே. (௨)

பண்ணுறுகிளிமொழிப்பாவைநின் திருமேனிபாசொளிவிரிப்ப
வந்தன்,பவளக்கொடிக்காமர் பச்சிளங்கொடியதாய்ப்பருமுத்தமரகத
மதாய்த், தண்ணறுமல்லற்றுறைச்சிறையனங்களி தலைக்குங்கலாம
ஞ்ஞையாய்ச், சகலமுந்நின் திருச்சொரூபமென்றேவிடுஞ்சதுமறை
ப்பொருள்வெளியிடக், கண்ணுறுகுழலியர் குடக்கொங்கை பொங்கு
செங் களபமுங்கத்தூரியுங், கர்ப்புரமுமொக்கக் கலைத்தோடிவாணியு
ங் காளிந்தியுங்கங்கையாம், விண்ணுறுமளவளாய் விளையாடு வையைபு
துவெள்ளநீராடியருளே,விடைக்கொடியவர்க்கொருகயற்கொடிகொடு
த்தகொடிவெள்ளநீராடியருளே. (௩)

தூங்குசிலையருகா லுறங்குகுழனின்றனைத்தோடியர் தம்மேற்
குங்குமந், தோயும்பனித்துறைச்சிவிறிவீசக்குறுந் துளி யெம்மருங்கு
மோடி, வாங்குமலைவில்லியார் விண்ணூருநனைந்தவர்வளைந்திதிகப்ப
ஞ்செய், வண்ணமாச்செவ்வதச்செட்வானவண்ணமொடுஞ்சவிளை

யாடலேட்டப்பத், தேங்குமலையருவிநெடு நீத்தத்துமாசுணத்திரள்புற ஞ்சுற்றியீர்ப்பச், சினவேழமென்றொரு சுழிச்சுழல்வமந்தரத்திலாக்க டன்மதித்தன்மாணும், வீங்குபுனலவையைத்தடந்துறைகுடைந்துபு துவெள்ளநீராடியருளே, விடைக்கொடியவர்க்கொரு கயற்கொடிகொ டுத்தகொடி வெள்ளநீராடியருளே. (௪)

துளிக்கும்பனித்திவலைசிதரக்குடைந்தாடு துறையிற் றுறைத்த மிழொடுந், தொன்மறைதெளிக்குங்கலைக்கொடியெனுந் துணைத்தோ ழிமொழிப்புனன்மடுச், சொளிக்கும்பதத்தமற் றெவளென வனப் பேடையோடிப்பிடிப்பதமம்மை, யொன்பரிபுரத்தொனியுமடநடையு ம்வவ்வினதுணர்ந்துபின்மருடர்வமேதப்ப, நெளிக்குந்தரங்கத்தடங்க ங்கையுடனொட்டி நித்திலப்பந்தாடவும், நிரைமணித்திரளின்கழங் காட வுந்தன்னெடுங்கிரைக்கையெடுத்து, விளிக்கும்பெருந்தண்டுறைக்கூட வுள் வையைநெடுவெள்ளநீராடியருளே, விடைக்கொடியவர்க் கொருக யற்கொடிகொடுத்தகொடிவெள்ளநீராடியருளே. (௫)

வேறு.

துங்கமுலைப்பொற்குடக்கொண்டுதூநீர்நீந்திவிளையாடுந், துணை ச்சேடியர்கண்மேற்பசும் பொற்சுன்னமெறியவலச்சேந்த, வஞ்சணவி சும்பினின்குழற்காட்டறுகாற்சுரும்பரெழுந்தார்ப்ப, ஐயன்றிருமே னியிலம்மையருட்கட்சுரும்பார்த்தெழன்மானச், செங்கணிளைஞர் களி க்காமத்தீமூண்டிடக் கண்டிளமகளிர், செழுமென்குழற்கூட்டகிற்பு கையாற்றிரள் காய்க்கதலிபழுத்துநறை, பொங்குமதுரைப்பெருமாட்டி புதுநீராடியருளுகவே, பொருநைத்துறைவன்பொற்பாவாய்புதுநீராடி யருளுகவே. (௬)

ஊழியுட்புனற்றண்டுறைமுன்றிலிதுவெம்பெருமான்மண்சுமந் த, விடமென்றலாவெனக்கலப் பண்ணிசைப்பக்கசிந்துள்ளுருகியிரு, விழியுஞ்சிவப்பவாநந்தவெள்ளம்பொழிந்துநின்றனையால், மீண்டும் பெருகவிடுத்தவர்க்கோர்வேலையிடுகன்மிசையன்றே, பொழியுநறைக்கற் பகமலர்ந்தபிரசமலர்ப்பூந்துகண்மூழ்கும், பிறைகோட்டயிராவதங்கூ ந்தற்பிடியோடாடத்தேனருவி, பொழியும்பொழிக்கூடலிற்பொலிவா ய் புதுநீராடியருளுகவே, பொருநைத்துறைவன்பொற்பாவாய் புதுநீ ராடியருளுகவே. (௭)

மறிக்குந்திரைத்தண்புனல்வையை வண்டலிடுமண் கூடங்கட்டி, வாரிச்சுமந்தோர்க்கமைத்துணை மணிப்பொற்கூடத்திற் கணைத்தாற் றல், வெறிக்குஞ் சுமட்சே [illegible] விலாபூந்துகளமலைபோல [illegible]

தி, வெண்பிட்டிடவு மடித்தொருவன் வேலைக்கொளவும்வேண்டு மெனச், குறிக்குமிடத்திற்றடந்துநீர் குடையப்பெறினக் கங்கைதிருக்,கோடீரத்துக்குடியிருப்புங் கூடாதோவும்பொலன்குவட்டுப்,பொறிக்குஞ்சுறவக் கொடியுயர்த்தாய்புதுநீராடியருளுகவே, பொருநைத்துறைவன்பொற்பாவாய் புதுநீராடியருளுகவே. (அ)

வேறு.

சொற்கொடியோடு மலர்க்கொடிகொய்து கொடுத்தவினைத்தொடையுஞ், சுந்தரிதீட்டியசிந்தூரமும்மிரு துங்கக்கொங்கைகளின், விற்கொடிகோட்டிய குங்குமமுங்குடைவெள்ளங்கொள்ளைகொள, வெளியேகண்டுநின்வடிவழகையன்விழிக்குவிருந்துசெய, விற்கொடியோடு கயற்கொடிவீரனெடுத்தகருப்புவிலு, மிந்திரதநுவும்வணங்கவணங்குமிளைப்புருவக்கொடிசேர்,பொற்கொடியிமயமடக்கொடிவையை புதுநீராடுகவே, பொருநைத்துறையொடுகுமரித்துறையவள் புதுநீராடுகவே. (கூ)

கொள்ளைவெள்ளருவி படிந்திடுமிமயக் கூந்தன்படப் பிடிபோல், கொற்கைத்துறையிற் சிறைவிரிப்புனல் குடையுமனப்பெடைபோற்,றெள்ளமுதக்கட னடுவிற்றோன்று செழுங்கமலக்குயில்போற்,றெய்வக்கங்கைத் திரைபூத்தெழுமொரு செம்பவளக்கொடிபோற்,கள்ளவிழ்கோதையர் குழலிற்குழலிசை கற்றுப்பொற்றருவிற், களிநறவுண்டமடப்பெடையோடு கலந்துமுயங்கிவரிப், புள்ளூறுபூம்பொழின்மதுரைத்துறைமகள் புதுநீராடுகவே, பொருநைத்துறையொடு குமரித்துறையவள் புதுநீராடுகவே. நீராடற்பருவம்-முற்றிற்று. (ய)

———o———



உ

## ஊசற்பருவம்.



ஒள்ளொளியபவளக் கொழுங்கான்மிசைப்பொங்கு மொழுகொளியவயிரவிட்டத், தூற்றுஞ்செழுந்தண்ணிலாக்கால்விழுந்தனையவொண்டரளவடம்வீக்கிடு, மள்ளிடவழிந்து செற்றொளிதுளும்புங்கிரணவருணரத்நப்பலகையுக், காடுநின்றேற்றப் பரிதிமண்டலம்வளரும்பெருஞ்சுடராயேப்பத், தெள்ளுசுவையமுதங் கனிந்தவாநந்தத்திரைக்கடன் மடுத்துழக்குஞ், செல்வச்செருக்கர்கண்மனக்கமல வெச்சபூஞ்செக்கையிற்பழையபாடற், புள்ளொலியெழக்குடிபுகுந்தசுந்

தரவல்லி பொன்னூசலாடியருளே, புழுகுநெய்ச்சொக்கர்திரு வழகினுக்கொத்தகொடிபொன்னூசலாடியருளே. (க)

விற்பொலியநிலவுபொழி வெண்ணித்திலம்பூண்டு விழுதுபடமழுகதிர்விடும்,வெண்டரளவூசலின்மிசைப்பொலிவபுண்டரிகெவீட்டிற்பொலிந்துமதுரச், சொற்பொலிபழம்பாடல்சொல்லுகின்றவளுநின்சொருபமென்பதுமிளநிலாத், தூற்றுமதிமண்டலத்தமுதமா யம்மைநீதொன்றுகின்றதும்விரிப்ப,வற்பொலியவொழுகுமுழு மாணிக்கமணிமுகப்பேறிமழைமுகிறவழ்வதவ்,வெறிசுடர்க்கடவுடிருமடியிலவன்மடமக ளிருந்துவிளையாடலேய்க்கும், பொற்புரிசைமதுராபுரிப்பொலிதிருப்பாவை பொன்னூசலாடியருளே, புழுகு நெய்ச்சொக்கர்திருவழகினுக்கொத்தகொடிபொன்னூசலாடியருளே. (உ)

உருகியபசும்பொன் னசும்பவெயில்விசுபோ னூசலையுதைந்தாடலும்,ஒண்டளிரடிச்சுவடுறப்பெறுமசோகுநறவொழுகுமலர்பூத்துதிர்வதுன், திருமுனுருவங்கரந்தெந்தையார்நிற்பதுதெரிந்திடநமக்கிதுவெனச், செஞ்சிலைக்கள்வனொரு வன்முருடைமடக்காது தெரிகணைகள்சொரிவதேய்ப்ப, எரிமணிகுயின்றபொற்செய்குன்றுமழகதிரொதிப்பவெழுசெஞ்சோதியு, மிளமதியினமைப்பதுன்திருமுகச்செவ்விவேட்டெழுநாத்தலைத்தவமலன்,புரிவதுகடுக்குமதுராபுரிமடக்கிள்ளைபொன்னூசலாடியருளே, புழுகுநெய்ச்சொக்கர்திரு வழகினுக்கொத்தகொடி பொன்னூசலாடியருளே. (௩)

கங்கைமுடிமகிழ்நர்திரு வுளமசைந்தாடக்கலந்தாடுபொன்னூசலக், கடவுடிருநோக்கத்துநெக்குருகியிடநின்கடைக்கணோக்கற்றமற்றச்,செங்கண்விடையவர் மனமுமொக்கக்கனிந்துருகு செய்கையவர்சித்தமேபோற், திருவூசலாவிருந்தாடுகின்றுயெனுஞ் செய்தியையெடுத்துரைப்ப, வங்கணெடுநிலம்விடர்படக்கிழித்தோடு வேரடியிற்பழுத்தபலவி,னளிபொற்சுளைக்குடக்கனியுடைந் தூற்றுதேனருவிபிலமேழுமுட்டிப், பொங்கிவழிபொழின் மதுரமதுரைநாயகிதிருப்பொன்னூசலாடியருளே,புழுகுநெய்ச்சொக்கர்திருவழகினுக்கொத்தகொடிபொன்னூசலாடியருளே. (ச)

சேர்க்குஞ்சுவைப்பாடலமுதொழுக வொழுகுபொற்றிருவூசல்பாடியாடச், சிவபிரான் திருமுடியசைப்பமுடிமேற் பொங்குசெங்கணரவரசசிலம்பவைத், தார்க்கும்பணடவியசைப்பச்சராசரமுமனாரகின்றதம்மனையசைந், தாடலாலண்டமுமகண்டபகிரண்டமுமசைகதாடுகின்றதேய்ப்பக், கார்க்கொந்தளக்கோதை மடவியர் குழற்கூ

ட்டு கமழ்நறும்புகைவின்மிசைக், கைபரந்தெழுவதருமா திரவிம ண்டலங் கைக்கொளவிருட்பலம்வான், போர்க்கின்றதொக்குமதுரா புரிமடக்கிள்ளை பொன்னூசலாடியருளே, புழுகுநெய்ச்சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடிபொன்னூசலாடியருளே. (ரு)

தேர்க்கோலமோடுநின் திருக்கோல மூங்கண்டுசெிந்தனைபுழுங் குகோபத், தீபவியழுந்தெழுங்காமானலங்கான்ற சிகைமென்வ ழுந்துபொங்குந், தார்க்கோல வேணியர்தமுள்ளமெனவேபொற்ற டஞ்சிலையுமுருகியோடத், தண்மதிமுடித்ததும் வெள்விடைக்கொள் மணிதரித்ததும்விருத்தமாகக், கார்க்கோலநீலக்கருங்களத் தோமொரு வர்செங்களத்தேற்றலமரக், கட்கணை துரக்குங்கருப்புருவவில்லொ டொருகைவிற்குனித்துநின்ற, போர்க்கோலமேனிதிருமணக்கோலமா னபெண்பொன்னூசலாடியருளே, புழுகுநெய்ச் சொக்கர்திரு வழகி னுக்கொத்த கொடிபொன்னூசலாடியருளே. (சா)

குழியும்பசுங்கண் முசுக்கலைவெரீஇச்சிறு குறும்பலவி னெடிய பாரக், கொம்பொடிபடத்தூங்குமுட்பறக்கனியின் குடங்கொண்டுநீந் தன்மடைவாய்,வழியுங்கொழுந்தேனுவட்டெழுதயங்கா வின்வள்ளுரி ர்க்கருவிகர்க்கூன், மந்திகள்ிரிந்தேகும்விசையினில்விசைத்தெழுமரக் கோடுபாயவயிறு,கிழியுங்கலைத்திங்களமுதருவி தூங்குவகிளைந்துவண் டுழுபைந்துழாய்க், கேசவன் கால்வீசவண்டகோளகைமுகடுகீண்டு வெள்ளருவு பொங்கிப், பொழியுந்திறத்தினைநிகர்க்கு மதுரைத்தலைவி பொன்னூசலாடியருளே, புழுகுநெய்ச்சொக்கர்திருவழகினுக் கொத் தகொடிபொன்னூசலாடியருளே. (எ)

ஒல்குங்கொடிச்சிறுமருங்கிற்கிரங்கிமேல்லோதிவண்டார்த் தெழ ப்பொன், னூசலையுதைந்தாடுமௌவின் மலர்மகளம்மை யுள்ளடிக் கூன் பிறைதழீஇ, மல்குஞ் சுவட்டினைவலம்புரிக்கீற்றிதுசொல்வாணியென் றசதியாடி, மணிமுறுவல்கோட்டநின்வணங்கா முடிக்கொருணவக்க னெடுநாண்வழங்கப், பில்குங்குறும்பணிக்கூதிர்க்குடைந் தெனப்பிர சநாறைப்பாற்கிளம்- பேதையர்களூட்டுங் கொழும்புகை மடுத்துமெ ன்பெடையொடுவரிச்சுரும்பர்- புல்குந்தடம்பணையடுத்தமது ரைத்த லைவிபொன்னூசலாடியருளே,பு ழுகுநெய்ச் சொக்கர்திரு வழகினுக் கொத்தகொடிபொன்னூசலாடியருளே. (அ)

கொன்செய்த செழுமணித் திருவூசலரமகளிர் கொண்டாட வாடு ந் தொறுங், குறுமுறுவலனடுநில வருந்துஞ்ச கோரமாய்க் கூந்தலங் கற்றை சுற்றுந், தென்செய்த மழலைச் சுரும்பராய் மங்கைநின் செங் கைப் பசுங்கிள்ளையாய்ந், தேதேவன் பொலிவ தெவ்வுருவுமாமவன் தி

ருவுருவின் முறைதெரிப்ப, மின்செய்தகாயலவர் மேற்றலத்தாடிய வி ளைப்புனவினருவி குடைபம், வெள்ளானை குங்குமச் செஞ்சேறு நா றமட மென்பிடியைஞ்சி நிற்கும், பொன்செப்தமாடமலிகூடற் பெ ருஞ்செல்வி பொன்னூசலாடி யருளே, புழுகுநெய்ச்சொக்கர் திருவ ழகினுக் கொத்தகொடி பொன்னூசலாடியருளே. (கூ)

இருபதமுமென்குரற்கிண்கிணியுமுறையிட் டிவரத்திடமரிச்சிலம்பு, மிறுமிறு மருங்கென் றறியங்கு மேகலையும் பொனெழுதுசெம் பட் டுடுக்குத், திருவிடையுமுடைதாரமும்மொட்டியாணமுஞ்செங்கைப்ப சுங்கிள்ளையுந், திருமுலைத்தரளவுத்தரியமும்மங்கலத்திருநாணுமழகெ ழுகதின், றருள்பொழியுமதிமுகமுமுகமதியினெடுநிலவரும்புகுருநகை கயுஞான.வாநந்திமாக்கடல்குடைந்துகுழைமகரத்தொடமராடு மோட் ரிக்கட், பொருகயலும்வடிவழகுபூத்தசுந்தரவல்லிபொன்னூசலாடியரு ளே, புழுகுநெய்ச்சொக்கர் திருவழகினுக்கொத்த கொடிபொன்னூச லாடிருளே.

ஊசற்பருவம்-முற்றிற்று.

ஆக பருவம்-யய-திருவிருத்தம் ராஉ.

ஸ்ரீநாகூஷியம்மைப்-பிள்ளைத்தமிழ்

